

உ

ஸ்ரீராமஜெயம்



# ஸ்ரீ லலிதா

## நவரத்தினமென்னும்

# மணியடி சாஸ்திரம்.



## முதற்பாகம்.

இஃது

புலிவலம் R. கோபாலய்யரால்,

எழுதப்பட்டது.

விலை ரூபா - 1.

GOWRI VILAS.

TRICHINOPOLY,

*18th June, 191*

I have much pleasure in certifying that the *Manai Sastram* is a collection of the fragmentary knowledge obtaining in the popular notions on the subject and is a useful attempt to bring the subject of Ancient Architecture within easy reach of the public.

(Sd.) A. S. BALASUBRAMANI AIYAR.

*Sub-Judge. Trichinopoly*



The bearer M. R. Ry. Gopala Iyer Avl. of Pulivalam has published a book on the science of House Building. This is a rare publication which every lover of the Hindu Architecture ought to encourage by distributing the copies to friends and relatives interested in the sceince. I find that the rules in the book *apply practically* in the case of some houses which I examined. The author deserves every encouragement as the publication is not what we come across every day.

MAYAVARAM; }
18th April, 1917. }

(Sd.) C. N. SUBRAMANIA IYER,

*Retired Sub-Engineer, P. W. D.*

ஸ்ரீ [illegible] சகாய-மங்களம்.

ஸ்ரீ லலிதா

நவரெத்தனமென்னும்,

# மனையடி சாஸ்திரம்.

முதற்பாகம்

இஃது

மஹரிஷிகளாலும் விசுவகர்மா மயன்முதலியவர்களால்
சொல்லப்பட்ட பல சாஸ்திரங்களிலுள்ள கிரந்த
சுலோகங்களையும் தமிழ் பாட்டுகளையும்
நாகப்பட்டணம் தாலூகா புலிவலம்
**R. கோபாலய்யரால்**
வசனநடையில் எழுதப்பட்டு
சீர்காழித் தாலூகா நல்விநாயக புரத்திலிருக்கும்
ஜோஸியம்,
**மகா-ள-ள-ஸ்ரீ ராமஸ்வாமி அய்யர் அவர்களால்**
பார்வையிடப்பட்டு,
ஷை நல்லவிநாயகபுரம் கிராமம் மிராசு
மகா-ள-ள-ஸ்ரீ S. வைத்தினாதஸ்வாமி அய்யர் அவர்கள்
கோருதலின்பேரில்
ஷை
**R. கோபாலய்யரால்**

திருச்சி
"லக்ஷ்மீ விலாச" அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1914.

நாகை நாஷனல் ஹைஸ்கூல் தலைமை தமிழ்ப்பண்டிதர்

**மகா-ள-ள-ஸ்ரீ G. சதாசிவம் பிள்ளை அவர்கள்**

இயற்றியது.

சீராரும் புலிவலத்திற்றிகழ்மறையோர் குலத்துதித்த சீர்த்தியாளன்
பேராருங் கோபாலப் பெரியவன்றன் மயனூலைப் பெரிதாயாய்ந்தே
பாராரும நல்லலிதா நவரத்னமெனும் பெயராற் பகர்ந்துதந்தான்
ஊராரும் மனைநூல் கட்குயிரா ருமனைநூலாயுரைக்கலாமே.

10—5—1914. G. சதாசிவம் பிள்ளை நாகை ஐஸ்கூல்
தலைமைதமிழ்பண்டிதர்.

திருவாரூரிலிருக்கும் மாயூரம் மகா-ள-ள-ஸ்ரீ சுவாமிநாத
தேசிகர் இயற்றிய அகவல்.

பொன்னார் புலிவலம் பொற்பார் நகரின்
மன்னும்மகிபன் மறையவர் குலத்தோன்
கோக்குலம் போற்றும் கோபாலப் பெயரோன்
நோக்குதற் கரிய நுண்ணிய மதியான்
லலிதாம் வடமொழிவயினின்றிலகும்
லலிதா நவரத்நமெனு லதுவில் நூலை
மயனூல் கற்றோர் மகிழ்ச்சி யெய்தவு
மியனூல் கற்றோரினிதெடுத் தேத்தவு
மமிழ்தினுமினிய தமிழ் நன்மொழியாற்
றமிழுகமுய்யத்தந்தனன் றெருக்கே

26—4—1914. மா. மு. சுவாமிநாதன், திருவாரூர்

உ

ஸ்ரீராமஜெயம்.

திருவாரூர் போர்ட்டு ஐஸ்கூல் அஸிஸ்டெண்டு டீச்சர்
மகா-ா-ா-ஸ்ரீ P. A. திருவேங்கடத்தய்யங்கார் அவர்கள்
இயற்றியது.

[illegible]

26—4—1914

P. A. திருவேங்கடத்தய்யங்கார்
அஸிஸ்டெண்டுடீச்சர் போர்டு ஹைஸ்கூல்
திருவாரூர்.

திருவாரூர் ஹைஸ்கூல் தலைமை தமிழ் பண்டிட்
மகா-ா-ா-ஸ்ரீ ஆர். பொன்னய்யாப்பண்டாரம் அவர்கள்
இயற்றியது.

மலைமகன் கேள்வன் மகிழ்ந்தினி துறைவதும்
அலைமகள் தலைவனை யன்பொடு பெறுவது
மாகிய கமலையின் ஐங்குரோசத்துள்
தேனுறு திசைக்கண் டெரிவரும் பெருமைக்
கலிவலஞ்செல்லாப் புலிவலமதனிற்
கவுண்டினியனென் னுங் கலைச்சாலறிஞர்தம
கோத்திரந் தனில்வரு கோதிலாக்குரிசில்
பண்ணூலாகும் நன்னூல் பயின்றோன்
ஒழுக்கமுதலாம் விழுப்பமுதுடையோன்
காபாலன் மகிழ்வுறுங்கரிசில் கோபாலன்
மண்டலத்தோர்கள் மகிழ்வுடன் வாழ
மனையடி சாத்திர மெனப்படு மானூல்
கத்திய ரூபமாக் கருணையினியற்றி
பாவலர் வியப்புற யாவரும் நயப்புற
வெழுதாவெழுத்தில் லியைவித்தனனே.

1—5—1914.
திருவாரூர்.

R. பொன்னய்யாபண்டாரம்,
தமிழ் தலைமை உபாத்தியாயர்.

ஸ்ரீ ரஸ்து.

# ஸ்ரீலலிதா நவரெத்தினமென்னும் வாஸ்து சாஸ்திர பிரகடனம்.

1. நமது முன்னோர்கள் ஆறு சாஸ்திரங்களில் ஒன்றாகிய ஜோதிஷ சாஸ்திரத்தை அனுசரித்து சுபாசுபகிரியைகளை நடத்தி வந்தார்கள். அதேவிதமாகவே நாமும் நடத்திவருகிறோம். ஜோதிஷ சாஸ்திரங்கள் பலவுள. அவ்விதமாயுள்ள அநேக சாஸ்திரங்களைப் படித்து வந்த பெரியோர்கள் அப்படி தாம் கற்ற விஷயங்களை பலருக்கும் வெளியிடாமலும் பிறர் அறிந்து கொள்வதினால் தமக்கு உண்டாகும் மதிப்புக்குறைவுபடும் என்ற எண்ணத்தினாலோ முடிவில் அவர்கள் தாம்கற்ற அருமையான விஷயங்களை பிறர் அறிய முடியாமல் அவர்களோடு மாண்டு மடிந்து, மண்ணில் மறைந்து போயின அதுவும் தவிற அவர்கள் இறந்த பிறகு அவர்கள் சந்ததிகள் அவர்களாலெழுதப்பட்ட நூல்களை தாம் கெவனியாமலும் கெவனிப்பதாய் கேட்பவர்களுக்கு கொடாமலும் கறையான் முதலியவைகளுக்கு கொடுத்துவிடுகிறார்கள்.

2. அன்னியதேசத்தவர்களாகிய ஆங்கிலேயர்கள், ஜர்மன் பிரஞ்சு, அமெரிக்கா முதலிய தேசத்தவர்கள் எக்காலத்திலும் எவ்விதத்திலும் எவ்வளவும் குறைவின்றி விடாமுயற்சியுடன் தமக்குக் கிடைத்த சாஸ்திரங்களின் மூலமாகவே பலகோடி கிரந்தங்களை பாண்டித்தியம் செய்துகொண்டு அவைகளை பத்திரிகைவாயிலாகவும் புத்தகரூபமாகவும் பிரசுரஞ்செய்து உலகமெங்கும் பரவும்படி செய்கின்றனர். அதனால் அவர்கள் நல்வாழ்வையும் பெருமபுகழையும் அடைவதன்றி உலகத்தோர்களுக்கும் நன்மையையுண்டாக்குகின்றனர்கள்.

3. கிரகஸ்தாஸ்சிரமிகளுக்கு முக்கியமாய் வேண்டியது, வீடு அவ்வீடு அமையவேண்டிய காலம், இடம், கருவி முதலியவைகளை எளிதில் பலரும் உணரும் பொருட்டு, மஹாரிஷிகளாலும் மயன் விசுவகர்மா முதலியவர்களாலும் சொல்லப்பட்ட பலசாஸ்திரங்களிலிருந்து முக்கியமான விஷயங்களை யாவரும் எளிதில் அறியும்பொருட்டு தமிழில் வசனநடையாக ஸ்ரீலலிதா நவரெத்தினமென்னும் பெயருடன் வாஸ்து சாஸ்திரத்தை யான் மபநூற்றிட்டார்த்தங்களையும் வாஸ்து சித்தாந்தங்களையும் சுமார் 20 வருஷகாலமாய் பலரிடமும் கேட்டறிந்ததோடும் நூலின் வழியாய் நேர்கொண்டு இது தகுமெனத் துணிந்து மேற்சுட்டிய பெயரையுடைய புஸ்தகத்தை எழுதத் துணிந்தேன்.

4. இச்சாஸ்திரத்தை வெளியிட உத்தேசித்த எனக்கு மனப்பூர்த்தியாய் என்னுடன்கூட இக்கிரந்தத்தை வெளியிடவேண்டியதற்காக சிலகிரந்தங்களிலிருந்து தமிழில்மொழி பெயர்த்துக்கொடுத்த திருவானைக்காவல் மகா-௱-௱-ஸ்ரீ சமபோ ஜடாவல்லபர் திருவாரூர் ஹைஸ்கூல் உபாத்தியாயர் மகா-௱-௱-ஸ்ரீ P. A. திருவேங்கடத்தய்யங்கார் திருவாரூர் மகா-௱-௱-ஸ்ரீ சுப்பிரமணியக்குருக்கள் சிதம்பரம் மகா-௱-௱-ஸ்ரீ பாண்டிய ராஜா உபாத்தியாயர் திருவானைக்காவல் மகா-௱-௱-ஸ்ரீ துரைசாமி சிரவுதிகள் இவர்களுக்கு எனது வந்தனம் எப்போதும உரியது.

5. முதலில் இந்த கிரந்தத்தை ஆரம்பிக்கிற காலத்தில் சிற்ப சாஸ்திர கிரந்தங்கள சில சிலபாகஙகள் மட்டிலும் கிடைத்தது பிறகு மயன்மதம், மானசாரம், மரீசிபடலம், சாசிபம், அத்திரிப்படலம், சில்ப்பதீபிகை முதலிய கிரந்தங்கள கிடைத்திருப்பதை தமிழ்ப்படுத்தி வருகிறபடியால் இதைமட்டிலும முதல பாகமாக முதலி அச்சிடப்பட்டது. கூடிய சீக்கிரம் 2-வது பாகத்தில மேற்கண்ட புஸ்தகத்திலுள்ள விஷயங்கள முழுமையும் வெளிப்படுத்தபபடும்.

6. இக்கிரந்தத்துக்கு முக்கியமாய் அட்டவணை விபரமாய் கொடுக்காத காரணம். புஸ்தகமுழுமையும் பார்க்காமல் வேணடிய விஷயஙகளைமட்டிலும் பார்த்துவிட்டு முழுமையும் கவனிக்கமாட்டார்கள என்ற எண்ணத்தின் பேரில அட்டவணை கொடுக்கப்படவில்லை

குறிப்பு:— இதில் நூதனமாய் சேர்க்கவேண்டிய விஷயங்களையும், இதிலுள்ள பிழைகளையும் தெரிவிக்கும் பக்ஷத்தில வந்தனத்துடன் ஏற்றுக்கொள்ளப்படும்

ஆர். கோபாலய்யர்,
புலிவலம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 7 | [illegible] | [illegible] |
| | 8 | [illegible] | [illegible] |
| | | [illegible] | [illegible] |
| 26 | 28 | கைகளை | கைவிரல்களை |
| 27 | 22 | சுத்தோகத்தி | சுத்தோதகத்திஞல் |
| ,, | ,, | பூர்லோகத்த | பூர்வோக்த்த |
| 28 | 4 | ஆயாதறி | ஆவர்த்தி |
| ,, | 7 | நிர்மானம் | நிர்மாணம் |
| 28 | 25 | புறப்படக்கூடியது | புறப்படக்கூடாது |
| 29 | 5 | பாபா | பாப |
| 50 | 2 | சுபனும் | சுபாளும் |
| 51 | 7 | சல்லி நிர்ணயம் | சல்லிய நிர்ணயம் |
| | 19 | சல்லிய | சல்லியம் |
| | 24 | வடக்கி | வடக்கு |
| 58 | 11 | சுதல | சுமுள |
| | 13 | ஆரிய | ஆகிய |
| | 23 | இருடத்தை | இருப்பிடத்தை |
| 59 | 11 | இந்த ராசி 1 வரு | இந்த ராசி 1-க்கு |
| | 17 | சுபக்கோட்கள் கூடி நிறகினும் | சுபக்கோட்களை பாபக் கோட்கள் கூடிநிற்கினு |
| 60 | 7 | இவைகளுக்குண்டெ ன்பது | இவைகளுண்டென்பது |
| 60 | 9 | பாம்பிதல் | பாம்பாதல் |
| 79 | 18 | 9-வதுபொத்தபலன் | 9-வது வயது பொருத் |

## நோட்டீஸ்

இரண்டாவது புஸ்தகத்தில், கூபசக்கிரங்களும், சல்லிய சக்கிரங்களும், கிருமங்களிலும் வீடுகளிலும் உள்ள தோஷங்களின் விபரங்களும், அதற்குப் பரிகாரங்களும், 64, 81, 96, 141, 240, 444, 844, 1000, வாஸ்து பதங்கள் செய்ய விபரமும் 2000 செய்யுட்களும் [illegible] தோஷங்களுக்கு சாந்திகளும், ஆலய லெக்ஷ[illegible], [illegible] லக்ஷணங்களும், அச்சிடப்பட்டு சீக்கிரத்தில் [illegible]ப்படுத்தப்படும்.

## முதற்பாகம் விலை ரூபா ஒன்று.

## இரண்டாம்பாகம் ரூபா ஒன்றரை.

இப்புத்தகம் வேண்டியவர்கள் அடியிலகண்ட விலாசத்துக்கு எழுதி பெற்றுக்கொள்ளலாம்.

R. கோபாலய்யர்
புலிவலம் விஜயபுரம் போஸ்டு
தஞ்சாவூர் ஜில்லா.



ஜயதுர்காம்பாள் துணை.

# முகவுரை.

இப்பூவுலகின்கண் சிருஷ்டிக்கப்பட்ட சிருஷ்டிகள் யாவும் நான்கு வகைகளாக பிரிக்கப்பட்டிருக்கிறது. அவை பை, முட்டை, வித்து.வியர்வை இவைகளினின்றும் உண்டாகின்றன.

அவைகள் நால்வகையோனி எழுவகைத்தோற்றம்.

(1) தேவர் (2) மக்கள் (3) மிருகங்கள் (4) பறவைகள் (5) ஊர்வன (6) நீர்வாழ்வன (7) தாவரங்கள் என எழுவகை தோற்றங்கள்; எண்பத்து நான்குலக்ஷம் யோனி பேதங்களாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன:- தேவர் பதினான்கு லக்ஷம், மக்கள் ஒன்பது லக்ஷம், விலங்கு பத்துலக்ஷம், நீர்வாழ்வன பத்துலக்ஷம், ஊர்வன பதினொருலக்ஷம், பறவைகள் பத்துலக்ஷம், தாவரங்கள் இருபது

லக்ஷம் எனவகுக்கப்பட்டிருக்கிறசிருஷ்டிகளில் தேவர் முதல்மக்கள் இரண்டாவது மற்றவை அறிவில் படிப்படியாய் குறைவானவைகள்.

இவைகளுள் மக்கட்பிறவிகளைப்பற்றி கொஞ்சம்சொல்லுவோம்.

பிரமச்சரியம் மக்கள் பிறவியில் கலியாணம் செய்து கொள்ளாமல் தர்மசாஸ்திரங்களில் சொல்லுகிற பிரகாரம் விருதாதிகளை அனுஷ்டித்தும் அறுசமயத்தை நடப்பவர் பிர்மசாரியர்.

கிரகஸ்தன் மனைவி மக்கள் மாடு கன்று வீடு முதலியவைகளை வைத்துக்கொண்டு மற்ற ஆச்சிரமத்தார்களுக்கு உதவிசெய்து கொண்டும் ஈசுவரத்தியானம் செய்துகொண்டும் இல்லறதர்மம் வழுவாது நடத்துபவர் கிரகஸ்தன்.

வானப்பிரஸ்தர் தானும் தன் மனைவியுமாக காடுகளில் சென்று காய்கனி கிழங்குகளைபுசித்துக்கொண்டு ஈசுவரனைத்தவிரமற்றொன்றின்பேரிலும் பற்றுதலில்லாமல் இருப்பவர் வானப்பிரஸ்தர்.

ஸந்நியாசம் ஈசுவரனைத்தவிர மற்றொன்றின்பேரிலும் பற்றுதலில்லாமல் இருத்தல் ஸந்நியாசம்.

இந்நான்கினுள் இரண்டாவதான கிரகஸ்தாசிரமமே மேலானது என்பதை அநேகவிதமாய் ரூபிக்கலாம். ஆனால் அதைப்பற்றிஎழுதப்புகின் ரொம்பவும் விரிவாகும். இக்கிரகஸ்தாசிரமிகளைப்பற்றி வடமொழியில் ஒருசுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது "ருணாநுபந்தரூபேண பசு பத்னிஸுதாலயா" என்று சொல்லபட்டிருக்கிற சுலோகத்தின் கருத்தென்னவெனில் இப்பூமியின் கண்ணுள்ள இல்லறத்தார்களுக்குப் பூர்வஜன்மத்தின் கர்மசஞ்சிதத்தின் அளவாய் பசு, பத்னி, பிள்ளை, வீடு, முதலியவை அமைவதாயினும் இவைகள் சுதுணலக்ஷணங்களை அடைந்திருந்தால் மாத்திரமே அவ்வில்லற ஆசிரமதர்மம்.

குறைவின்றி நிறைவேறி இம்மைமறுமைப்பயன்களை அடையக்கூடும். ஆகையால் இவ்வங்கலக்ஷணங்களை திருத்தமாக இருக்கச்செய்துகொள்ளமுயற்சிப்பது ஒவ்வொருவருடைய முக்கியமானகடமையாகும். அன்றியும் மேற்கண்ட அங்கம்நான்கினுள் பசு 'பத்தினி' ஸுதன் இம்மூன்றையுமனுபவிக்க நான்காவதங்கமாகிய வீடே முதற்காரணமாகவிருக்கிறது.

இலக்ஷணங்களோடு அமைந்தவீடுகளில் வசிக்கின்றவர்கள் துன்பங்கள் அணுகாமல் பரம்பரையாய் சுகமாக வாழ்ந்துகொண்டிருப்பதை விசேஷமாய் நாம் பார்க்கலாம்.

வீடுகட்டுவதற்காக ஏற்பட்டிருக்கிறலக்ஷணங்களில்பேதப்பட்டு மூலைக்குத்தல், தூலக்குத்தல், கோவில் குத்தல், குளக்குத்தல், சந்துக்குத்தல் முதலியஇன்னும் அநேகவிதபிசகுகள் ஏற்பட்டுமனை சாஸ்திரத்தில் சொல்லப்பட்டகெற்பம் ஆதாயம் சிலவு யோனி வயது இன்னுமற்றப் பொருத்தங்கள் சரியாய்அமையாமல்மாறுபடக்கட்டியிருக்கிற வீடுகளில வசிப்பவர்கள் பலவிதக் கஷ்டங்களுக்குள்ளாகி அவர்கள்படுந்துன்பங்களை நாம் பார்த்தும் கேட்டுமிருக்கின்றோம். தவிரமனைக்கு சொல்லப்பட்ட இலக்ஷணங்கள் அமைந்து சாஸ்திரபிரகாரம் காலங்களில் அமைந்து கட்டபட்டிருக்கிறவீடுகளில் ஸத்தேவதைகள் வாஸஞ்செய்யுமென்றும் விதிக்குமாறுய்க்கட்டப்பட்டுள்ள வீடுகளில் க்ஷுத்திரதேவதைகளாகிய பேய்பிசாசு முதலிய துஷ்டகணங்கள் வந்தடைந்து அக்கிரகத்தில்வசிப்பவர்களுக்கு கடன், நோய், பீடை, சந்ததிகஷ்டம் இன்னும்பலவிதத்துன்பங்களை உண்டாக்குமென்றும் ஸ்மிருதிவாக்கியமிருப்பதால்உலகத்தில் இவ்வாழ்பவர்கள் மனை லக்ஷணங்களையும் அது கட்டவேண்டிய இடம் காலம் கருவி முதலியவற்றை எளிதில் உணர்ந்து கொள்ளும் பொருட்டு பரமசிவனும், குமாரக்கடவுளாலும், காசிபர், அகஸ்தியர்,வஸிஷ்டர்,கர்க்கர், பிரகஸ்தர் முதலிய மகரிஷிகளுக்குஉபதேசிக்கப்பட்டு, விசுவகர்மா, மயன் முதலானவர்களால் வடமொழிகளிலும் தமிழிலும் சொல்லப்பட்ட வாஸ்து சாஸ்திரங்கள் 32 பேதங்களாக பிரிக்கப்பட்டிருக்கிறது. அவற்றில் அடியில்காட்டியசாஸ்திரங்களிலுள்ள ஸாரங்களைஒருங்குசேர்த்து வசனங்களாகவும அட்டவணைகளாகவும், பதினாறுஅத்தியாயமாக பிரித்து **ஸ்ரீ லலிதாநவரத்தின** மென்னும் சாஸ்திரத்தை ஒவ்வொருவரும்ஒரு அஸ்தபூஷணமாகஏற்றுக்கொள்வார்கள் என்ற எண்ணத்துடன் வரையத்துணிந்தமையானது அகரவர்க்கமெழுதத் தெரியாதவனொருவன் அரியசாஸ்திரங்களுக்கு உரையெழுதக்கருதினமைபோலும் வான்கோழியானது மயிலின் கண் முன் ஆடத்துணிந்ததுபோலும்.

ஆயினும் ஆவின்பால் அசுத்தமாகியமட்கலத்தில் பெய்திருப்பினும் அப்பாலின் பெருமையினையறிந்தோர் மட்கலத்தினது சிறுமை

நோக்கி யொழியார்கள் அதுபோல யான் அச்சிடக்கோரும் இச்சாஸ்திரத்தில் சொர்ச்சோர்வு பொருட்சோர்வுமுதலிய குற்றங்களால் நிறைந்த புன்சொல்லாயினும் அஃது தம்மோடு யொப்பாரும் மிக்காருமில்லாத கடவுளது பெரும் புகழோடு கலந்திருத்தலின் ஐவித விலக்கணங்களையும் உணர்ந்து சிங்காரம் வீரியம் பெருநகை கருணை இரௌத்திரம் குற்சை சாந்தம் அற்புதம் பயம் என்கிற நவரசவலங்காரங்களோடும் செய்யுட் புனைய வல்ல கவிவாணர்களாயினோரும் அக்குற்றங்களை நோக்கி யொழிப்பார்கள்.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் நூற்கும் ஓர் குற்றஞ் சாதிக்கத் துணிவாரென்பதற்கு

உண்டு குணமிங் கொருவர்க்கெனினும் கீழ்க்
கொண்டு புகல்வதவர் குற்றமே
வண்டுமலர் சேர்க்கை விரும்பும் செழும் பொழில்வாய்
வேம்பன்றோ காக்கை விரும்பும் கனி.

என்று பழையாரும் அவரை நோக்கி எள்ளி இருத்தலே சான்றும். பலகிரந்தங்களையும் ஆராய்ந்து இக்கிரந்தத்தை சிற்றறிவினையுடைய யான் எழுதத் துணிந்தமையால் இதில் ஏதாகிலும் பிழைகளிருப்பின் அன்னபக்ஷியானது தன்னிடம் கலந்து வைக்கப்பட்ட பாலையும் நீரையும் பால்வேறாகவும் நீர்வேறாகவும் பிரித்து பாலை மாத்திரம் பருகுகிறதோ அதைப்போல இதிலிருக்கும் சத்விஷயங்களை ஏற்றுக்கொண்டு பிழைகளை தெரிவித்து என்னைப் பெருமைப் படுத்தி ஆதரிக்கக் கோருகிறேன்.

இங்ஙனம்

**R. கோபாலய்யர்.**



உ

ஸ்ரீகணேசாயநமஹா:

அகிலாண்டேஸ்வரி துணை.

# ஸ்ரீ லலிதாநவரெத்ன மென்னும் மனையடி சாஸ்திரம்.

## விநாயகர்ஸ்துதி.

சீர்பூத்தமறை முதற்கட் பிரணவத்தி
னரும் பொருளைச் சிவனார்தந்த
பேர்பூத்த நிருமல சின்மய வடிவை
யானந்த பெருக்கை யென்றுங்
கார்பூத்த திருநெடு மாலயன் முதற்புங்
கவர் வணங்குங் கருணை வாழ்வைப்
பார்பூத்தவடியர் வினைகெடுத்தருளுங்
கற்பகத்தைப் பணிந்து வாழ்வாம்.

## ஸரஸ்வதிஸ்துதி.

தாவறு மூல மெலாந் தந்த நான்முகத்
தேவு தன்றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதோ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம்.

## சக்தி நவக்கோள் குருவணக்கம்.

காயத்திரி ஸாவித்திரி கலைவாணி கங்கை நாமம்
மேயநல் வுலகமாதா மெழுவரை விரும்பிப் போற்றி
ஆயநற் கதிர்நவக்கோ ளவைகளை வணக்கஞ்செய்து
தூயநற் கணிதமியாவும் சொல்குரு வணக்கஞ்செய்வாம்.

## அவையடக்கம்.

மாதவர் முன்பு சொன்ன வடமொழி சிற்பநூலை
தீதறு தமிழாற் செப்ப விசைந்தன னென்போலென்னிற்
சோதிமின் மினிட்டம்போலச் சொல்லுதற் கெண்ணியூம
ஞோதியிவ் வுலகுக்கேற்ப வுரைப்பனென் றிசைந்த தொப்பாம்,

# முதல் அத்தியாயம்.

## கடவுள் வணக்கம்.

மங்களங்களுக்கெல்லாம் மங்களமாயிருக்கிற வரதமூர்த்தி யெ ன்கிற ஸ்ரீகணேசரானவர் ஸர்வோத் கிருஷ்டராக விளங்குகிறார். ஸகலமானபேர்களாலும் வந்தனம் பண்ணக்கூடியவளாயும் வேத ரூபியாயுமிருக்கிற ஸரஸ்வதி தேவியானவள் ஸர்வோத் கிருஷ்டை யாக விளங்குகிறாள். புவனங்களுக்கெல்லாம் தாயாராகவுமிருக்கிற பார்வதி தேவியானவள் ஸர்வோத் கிருஷ்டையாக விளங்குகிறாள். மோக்ஷரூபியாயுமிருக்கிற மஹேசுவரரானவர் சப்த ரூபத்தைக் கொடுக்கட்டும்.

## ஆதியில் இக்கிரந்தம் உண்டான விதம்.

யாதாமொரு காரணத்தினுலோ பிர்மலோக முதலானலோகங் களில் கிரகஸ்தா சிரமத்தை ஆசிரியித்துக்கொண்டிருக்கிறார்களோ

அந்தக்காரணத்தினுல் மனை முகூர்த்தம் கிரகப்பிரவேசம் இதுகளு டைய ஸமயத்தைச் சொல்லுகிறேன் என்று பராசரமகரிஷியானவர் பிரகஸ்தருக்குச்சொன்னுர்.

ஓய் மகரிஷியே ஈசுவரராலே சொல்லப்பட்ட புராத ன வாஸ்து சாஸ்திரம் யாதொன்று உண்டோ அதை நீர் ஏகாக்கிர மனதுள்ளவராய் கேட்கலாமென்று முதலில் பராசரர் பிரகஸ்தருக் குச்சொன்னுர். பிரகஸ்தர் விச்வகர்மாவுக்குச் சொன்னுர். அந்த விசுவகர்மா வானவர் ஜகத்துக்கு ஹிதமாய் அநேக பேதயுக்தமான வாஸ்து சாஸ்திரத்தைச்சொன்னுர்.

## வாஸ்து புருஷன் உண்டானவிதம்

முன் திரேதாயுகத்தில் மஹாபூதமொன்று ஜலத்தில் சரீரத் தோடு நித்திரை செய்துகொண்டிருந்தது. அதைக்கண்ட ஸகல தேவர்களும் பயத்தால் சூழப்பட்டவர்களாய் சுவர்க்கத்தை விட்டு பிர்மலோகம்போய் பிர்மாவைச்சரணமாக அடைந்தார்கள். பூதங் களாலே தியாணிக்கக் கூடியவரே பூதங்களுக்கு ஈசுவரரே மகத் தாகிய பயம் நேரிட்டிருக்கிறது. எங்கே போவோம் எங்கே நடப் போம் ஓ பிதாமகரே! என்று தேவதைகள் பிரார்த்திக்க

அப்படிப்பயந்த தேவர்களைப் பார்த்து பிர்மாவானவர் நீங்கள் பயப்படவேண்டாம். மஹாபலனென்கிற அந்த பூதத்தை பூமியில் அதோமுகமாகத் தள்ளுங்கள் மனதில் சந்தேகப்படாதவர் களாயிருங்களென்று சொன்னதும் குரோதசப்தாளான தேவர்கள் அந்த மஹாபலனென்கிற பூதத்தை அதோமுகமாகத்தள்ளி அந்த இடத்திலேயே சந்தோஷமாயிருந்தார்கள்.

## வாஸ்து புருஷ சிருஷ்டிகாலம்.

அப்படிப்பட்ட மஹாபலனென்கிற அசுரனைத் திரேதாயுகத் தில் பராபவ வருஷம் புரட்டாசி மாசம் கிருஷ்ணபக்ஷம் திருதிகை திதி சனிவாரம் கிருத்திகா நக்ஷத்திரம் விதிபாதயோகம் விரு

ஷ்டிகர்ணம் பத்திராந்த முகூர்த்தம் குளிகைகாலத்தில் அதிக இறைச்சலில் அந்த மஹாபலனை வாஸ்து புருஷனாக சிருஷ்டித்தார். அப்படி சிருஷ்டித்த வாஸ்து புருஷனை ஹே! வாஸ்து புருஷா என்று கூப்பிட்ட பிர்மாவைச்சரணமாக அடைந்தான்.

## வாஸ்து புருஷன் பிர்மாவைப்பிரார்த்தித்தல்.

ஓய் ஜகத் பிரபுவே சாரசரமென்கிற இந்த பிரபஞ்சமெல்லாம் உங்களால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. நிராபாரதியான என்னை தேவதைகள் ரொம்பவும் பீடிக்கிறார்கள் என்ன செய்வேன் என்று பிரார்த்திக்க.

## வாஸ்து புருஷனுக்கு பிர்மாவரங்கொடுத்தல்.

லோக பிதாமஹரான பிர்மாவானவர் அந்த மஹாபலனென்ற அசுரனைப்பார்த்து நீ பயப்படவேண்டாம் நாம் உன்னை வாஸ்துபுருஷனாக சிருஷ்டித்திருக்கிறோம். கிராமத்தில், நகரங்களில் தூர்க்கங்களில் பட்டணங்களில் தண்ணீர் பந்தலில் ஜலோத்தியானத்தில் யாதாமொரு மனிதன் உன்னை பூஜித்தானானால் அவனுக்கு லக்ஷ்மி கடாக்ஷமுண்டாகி காரியங்கள் யாவும் ஜயமாக முடியும். அப்படி யாதாமொரு மனிதன் உன்னை பூஜை செய்யவில்லையோ அந்தமனிதன் மூதேவியையும் மிருத்தியுவையும் அடைகிறான். அதுவுமன்னியில் அவனுக்கு அடிக்கடி நல்லகாரியத்தில்விக்கினமுண்டாகும். வாஸ்து பூஜை செய்யாத புருஷன் உனக்கு ஆகாரமாக அவிர் பவிக்கிறான் என்று இந்தவிதமான வரங்கொடுத்து பிர்மாவானவர் அந்தரத்தியானமானார். ஆகையால் கிரகாரம்பம் கிரகப்பிரவேசம் முதலியவைகளில் வாஸ்து புருஷனை அவசியம் பூஜிக்க வேண்டும். தெரு நிலை வைக்கும் போதும் வருஷந்தோறும் எக்ஞாதி கிருதுக்களிலும் புத்திரஜனனகாலத்திலும் முன்போலவே வாஸ்து சாந்தி, வாஸ்து பூஜை, வாஸ்துபலி முதலியவைகளை விதிப்படி செய்யவேண்டும்.

விருத ஆரம்பகாலத்திலும் விவாககாலத்திலும் சிவ விஷ்ணு உஸ்தவாதிகளிலும் ஜீரணோத்தாரணத்திலும் சிற்பன்னியாசமெ

ன்கிற ஜன்னல், அலமாரி, கஸ்தூரிகட்டை, சிண்டு, முளை. கால்கள் இதுகள் வைக்கும் போதும் வாஸ்து பூஜை செய்யவேண்டும். இடி விழுந்தாலும் தனக்குத்தானே இடிந்து விழுந்தாலும் நெருப்புப்பிடித்தாலும் சாப்பமைகளினாலேயும் சண்டாளர்களினாலேயும் ஆக்கிரமிக்கப்பட்டாலும், ஏழுநாள் கோட்டான்கள் வசித்தாலும், காக்கைகள் வசித்தாலும், வாஸ்து பூஜை செய்யவேண்டும். ராத்திரி காலங்களில் துஷ்டமிருகங்கள் வசிக்கப்பட்ட இடத்திலும் பசு, பூனை, முதலிய ஜந்துகள் சப்திக்கப்பட்ட இடத்திலும் மாடப்புறாவசித்தாலும், இதுவுமன்றி பக்ஷிகள், குதிரைகள், சபதித்தாலும் ஸ்திரீகளால சண்டையுண்டாய் அவர்களால் தூஷிக்கப்பட்டாலும் இன்னும் இதர மஹோத்பாதங்கள் உண்டானாலும், அந்த இடத்தில் வாஸ்து சாந்தி வாஸ்து பூஜை செய்யவேண்டும்.

## சிற்பன் லெக்ஷணம்.

சிகை யக்ஞோபவீதம் பஞ்சகச்சம் உத்தரீயம் கர்ண குண்டலம் பவித்திரம் ஜபமாலிகை நெற்றியில் திலத முதலிய அடையாளங்கள் உருத்திராக்ஷம் இவைகள் அணிந்து கொள்ளப்பட்டவராயும் தெய்வ பூஜை நித்திய நைமித்திய கருமங்கள் உடையவராயும் பொறுமை அடக்கம் நற்குணம் நல்ல மனது முதலியவைகள் பொருந்தினவராயும் விகார ரூபமில்லாதவராயும் வர்ணாச்சிரம தருமப்படி நடப்பவராயும் சுகுண சுஞான விவேக முதலிய லட்சணங்களும் பொருந்தியவராயும் குல சிரேஷ்டராகவும் பூமி பரிக்ஷை மரம் செங்கல் தந்தம் சுதை கருங்கல் நவலோகம் முதலியவற்றின் பரிக்ஷையும் அவைகளால் சித்திரம் பிம்பம் முதலியவேலை தெரிந்தவராயும இருப்பவர் சிற்பன்.

(குறிப்பு) இப்படிப்பட்ட இலட்சணங்களோடு கூடியவர் கையினால் தேவாலயம் நகரம் கிரகம் கூபம் நந்தவனம் முதலியவைகளை உண்டாக்கினால் அதில் வசிப்பவர்கள் மேன்மேலும் விருத்தியடைந்து நீடூழி காலம் சௌக்கியமாய் வாழ்வார்கள். மற்றவர்கள் செய்யின் தீமை யுண்டாகுமே தவிர நன்மை உண்டாகாது.

சிற்பனுக்குச் செய்யவேண்டிய மரியாதை சுவர்ணம் வஸ்திரம் சந்தனம் தாம்பூலம் சாக்கரை வாழைப்பழம் முதலியதுகள் கொடுக்

து மரியாதை செய்து சந்தோஷிப்பித்தல் வேண்டும் மற்றும் மனை முகூர்த்தம் செய்யும் காலத்தில் அவ்விடத்தில் தன்னுடைய தாயாதிகளும் மற்றுமுள்ள இஷ்டமித்திரர்கள் சுமங்கலிகள் முதலியவர்களுடன் இருந்து முகூர்த்தம் செய்தல் வேண்டும் அவ்விடம் வந்திருப்பவர்களுக்கு சந்தனம் புஷ்பம் தாம்பூலம் முதலிய மரியாதைகளை செய்து பெரியோர்கள் அனுக்கிரகம் பெறல் வேண்டும்.

## சகுனம்.

மனை, முகூர்த்தம் செய்ய சிற்பனை அழைக்க வந்தவர்கள் ஒரு காலில் நிற்குதல் மற்றக் காலைச் சொரிதல் தலையைச் சொரிதல் முழங்காலையும் கைகளையும் கட்டிக்கொண்டும் கன்னத்தில் கையை வைத்துக்கொண்டும் முகம் சோர்ந்தும் துக்க வார்த்தைகளைப் பேசிக்கொண்டும் அகாலத்திலும் சிற்பன் தான் எண்ணெயிட்டுக்கொண்டிருக்கிற ஸமயத்திலும் வந்து கூப்பிடுவார்களேயானால் அந்த மனை நிறைவேறமாட்டாது திரவியம் நஷ்டமாம் முகூர்த்தம் செய்யும்போது தலையோடு, எலும்பு, யானைத்தந்தம், மயிர், கட்டை, கருங்கல், சாம்பல், கரி, இவைகள் இருக்கலாகாது. அப்படியிருந்தால் எஜமானனுக்கு ஆகாது பொன், தேரை, செங்கல், சங்கு, வெள்ளி. இரத்தினங்கள் இவைகளின் வர்க்கங்கள் காணில் சுபமுண்டாகும் முகூர்த்தம் செய்யப்படும் லக்னத்தில் குரு நின்றால் காகம் கெருடன் காணும். சந்திரன் கூடி நின்றால் நாரை காணும் சுக்கிரன் கூடி நின்றால் பாரத்துவாஜ பக்ஷி காணும். லக்னத்துக்கு 3, 7, 9ல் செவ்வாய் நின்றால் நாரை காணும். 3, 6, 11ல் பாபிகள் இருந்தால் மயூரபக்ஷியம் காணும். இவற்றில் சுக்கிரனிருந்தால் தயிர் குடம் காணும் குருவிருந்தால் பாற்குடம் காணும் சனி யிருந்தால் அக்கினி காணும். கேந்திரங்களில் ராகு, கேது, இருந்தால் சர்ப்ப தெரிசனமாம்.

## முழக்கோல் இலட்சணம்.

அணு 8 கொண்டது, சூரியனுடைய ரதத்துகள் ரதத்துகள் 8 கொண்டது பஞ்சின்துகள் பஞ்சின்துகள் 8 கொண்டது பாலன் மயிர் நுனி மயிர் நுனி 8 கொண்டது ஒரு ஈர். ஈர் 8 கொண்டது ஒரு பேன். பேன் 8 கொண்டது ஒரு யவை. யவை 8 கொண்டது

ஒரு மாணுங்குலம். மாணுங்குலம் 6 கொண்டது ஒரு தாலம். தாலம் 2 கொண்டது ஒரு விஸ்தி விஸ்தி 2 கொண்டது ஒரு அஸ்தம் அஸ்தம் 4 கொண்டது ஒரு தண்டம் தண்டம் 4 கொண்டது ஒரு பாகு. பாகு 4 கொண்டது ஒரு குரோசம் குரோசம் 4 கொண்டது ஒரு சத்வாரி.

## அஸ்தம்

8 வகை அவையாவன மாணுங்குலம் 24 கொண்டது ஒரு கிஷ்கு கிஷ்கு 25 கொண்டது பிரஜாபத்தியம் பிரஜாபத்தியம் 26 கொண்டது ஒரு தனுர்முஷ்டி தனுர்முஷ்டி 27 கொண்டது ஒரு தனுக்கிரகம் தனுக்கிரகம் 28 கொண்டது ஒரு பிராப்பியம் பிராப்பியம் 29 கொண்டது ஒரு வைதேயம் வைதேயம் 30 கொண்டது ஒரு வைபுல்லியம் வைபுல்லியம் 31 கொண்டது ஒரு பிரகீரணம்.

## வேறுவிதம்.

அணு 8 கொண்டது புன்னுனி புன்னுனி 8 கொண்டது நுன்மணல் நுன்மணல் 8 கொண்டது எள்ளு எள்ளு 8 கொண்டது நெல்லு நெல்லு 8 கொண்டது ஒரு துவரை துவரை 8 கொண்டது விரல் விரல் 6 கொண்டது கால்முழம் கால்முழம் 4 கொண்டது ஒரு முழம்.

## வேறுவிதம்.

துவரை 8 கொண்டது விரல் விரல் 6 கொண்டது சாண் சாண் 2 கொண்டது முழம்.

## வேறுவிதம்.

கர்த்தாவின் மத்திம விரல் கற்றளவு மாணுங்குலம், மாணுங்குலம் மாத்திராங்குலம் தேகலபதாங்குலம என மூன்று விதம் சிவலிங்கம் மற்ற விக்கிரகங்களையும் பாதாதி கேசம் வரையில் அளந்து கொள்ளவும் ஆத்யார்த்த பிம்பங்களையும் மாத்திராங்குலத்தாலும் வாகனங்களை பின் காலாதியாக தலை வரையிலும் சர்ப்பசர்தை வால்நுனி ஆதியாக தலை வரையிலும் பக்ஷிகளை காலாதி ஆகத தலை வரையிலும் கர்பக விருக்ஷம் தோரணம் கதலி கெர்ப்பக்கிரக முதலியவைகளை உயரத்தை மாணுங்குலத்தாலும் அளக்கவும்

## பொது விதி.

எஜமானனுடைய கை முழத்தால் 2 முழம் கொண்டது ஒரு முழம் எனப்படும்.

இங்கிலீஷ் ஜாதி அடியில் குறிப்பிட்ட அளவால் 34 அங்குலம் கொண்டது சிதம்பரம் சிற்சபை முழக்கோலுக்குச் சரி என்று பல பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். அந்தப்படி 34 அங்குலம் கொண்ட முழக்கோலால் அளப்பது உத்தமம்.

பிராம்மணனுடைய வீடு **அங்குல அளவால்** அளக்கக்கூடியவை ஆலயங்கள் மடம் சத்திரம் இவைகளும் தேர், வாகனம், சிலைகள். இதுகளை அங்குல அளவாக அளந்துகொண்டு செய்யலாம். மற்ற வருணத்தார்களுக்கு அங்குல அளவு கூடாது.

## முழக்கோல் செய்யவேண்டிய மரம்.

புளி, வேங்கை, தேக்கு, ஆச்சா, மா, பனை, மூங்கில், கருங்காலி, தென்னை, சந்தனம், சண்பகம், பலா, புரசு, தாமரைக்கொடி, இரும்பு இவைகளாம். இவற்றுள் மூங்கிலினால் செய்த கோல் பிராமணர்க்காம் ஆச்சா அரசர்க்காம் தேக்கு வணிகர்க்காம் வேங்கை வேளாளர்க்காம். இரும்பு தேவர்களுக்காம்.

## பூமி லட்சணம்.

வெளுப்பு சிவப்பு கருப்பு இப்படிப்பட்ட பூமிகளை தெரிசனம் செய்யவேண்டும். ஆகையால் ஆலயாதி கிரக நிர்மாணங்களுக்காக பூமிகளை அவசியம் பரிக்ஷித்துப் பார்க்கவேண்டும்.

## பூமியின் வாசனை.

நல்ல வாசனையுள்ள பூமி பிராமணனுடையது ரத்த வாசனையுள்ள பூமி க்ஷத்திரியர்களுடையது தேன் வாசனையுள்ள பூமி வைசியனுடையது கள்ளு வாசனையுள்ள பூமி சூத்திரனுடையது.

## ருசி.

தித்திப்பு ருசியுள்ள பூமி பிராமணனுடையது கசப்பு ருசியுள்ள பூமி க்ஷத்திரியனுடையது புளிப்பு ருசியுள்ள பூமி வைசியனுடையது துவர்ப்பு ருசியுள்ள பூமி சூத்திரனுடையது.

## ரூபம்.

நான்கு மூலை சதுரமும் யானை, சிம்மம், எருது, குதிரை இது களைப்போலொத்த ரூபமுள்ளதாயும், வேலி கட்டப்பட்டிருக்கிறது பலிபீடம்போலவும், திருசூலம்போலவும், சிவலிங்கம்போலவும், உப்பரிகை துவஜம் கும்பம் திரிகோணம் சக்கரம் சூரியன் ஸர்ப்பம் தப்பளை கழுகை யானை ஆடுகள் போலவும், கோணலாகவும், விசிறியைப்போலவும், வில்லுபோலவும், கோடாலிபோலவும், ஒருவராலேயும் போகக் கூடாததாகவுமிருக்கிற பூமியை தள்ளுபடி செய்ய வேண்டியது. மனோக்கியமாயுள்ள யாதொரு பூமியுண்டோ அதுவே வாஸ்து நிர்மாணம், வாஸ்து பூஜை செய்யத்தகுந்தது. விசேஷமாய் பிரயாசத்தால் பரிக்ஷிக்கவேண்டும்.

கெட்டியாயுள்ளபூமி மேட்டுபூமி வடக்கு கிழக்கு பள்ளமுள்ள பூமி பிராமணனுடையது. உயரமாயுள்ளது க்ஷத்திரியானுடையது. ஸமபூமி வைசியானுடையது. மேடு பள்ளமாயுள்ள பூமி சூத்திரானுடையது. ஸகல வருணத்தார்க்கும் ஸமபூமி ஸகல சுபத்தைக் கொடுக்கும்.

## நான்கு வருணத்தார்களுக்கும் உரிய பூமி.

குசம் தர்ப்பை இவைகளுள்ள பூமி பிராமணனுடையது. அருகுள்ள பூமி க்ஷத்திரியானுடையது. பல புஷ்பக்கொடியுள்ளது வைசியானுடையது. புல்லுள்ள பூமி ஆற்றோரம் பாரைகளுள்ள பூமி சூத்திரானுடையது.

## வீடு கட்டக்கூடாத இடங்கள்.

உலக்கைபோலும் அதிபயங்கரமாயும் வாயுவினால் பீடிக்கப்பட்டதாயும் வல்ல பல்லகமென்கிற மூலிகையோடு கூடியதாயும் நடுவில் மேடுபள்ளமுள்ளதாயும் கோணலாயும் சூரியனுக்குச சமமாயும் சுக்கு மாத்தடிபோலவும் விகார ரூபமுள்ளதாயும் அனர் உள்ளதாயும் பல்லுகள் இரும்புகளால் வியாபிக்கப்பட்டதாயும் நாச்சநது சுடுகாடு புத்துகள் ஆசாரமில்லாத ஜனங்கள் வசிக்குமிடம ஆலயமில்லாத ஊர் தேவமந்திர நிவாஸ பூமி பூவிவரத்தோடு கூடியதாயுமுள்ள கெட்ட பூமிகளை சிற்பர்கள் வர்ச்சிக்கவேண்டியது. அந்தந்த வர்க்கங்களுக்குடைய வாசனை, ருசி முதலியவைகள் உள்ள பூமி நல்ல

சுகத்தைத் தரும் அதற்கு வித்தியாசமாயிருந்தால் பலனும் வித்தியாசப்படும். ஆகையால் அவசியம் பூமியை பரிக்ஷித்தே கிரகங்கள் ஆலயங்கள் முதலியவைகள் ஏற்படுத்தவேண்டும்.

## பூமியின் இலட்சண பலன்.

நாலுபக்கமும் சரியாயிருக்கிற பூமி, எல்லாவற்றிலும் உயர்ந்த பூமி யானைபோலொத்தபூமி, பணத்தைத்தரும். சிம்மம்போலொத்த பூமி, தனக்குச்சரியான குணமுள்ள பிள்ளைகளைத்தரும். விருஷபம் போலொத்தபூமி, பசு விருத்தியைக்கொடுக்கும். வர்த்துலாகாரமான பூமி, நியாயமாய்க் கிடைக்கக்கூடிய திரவியத்தைக்கொடுக்கும். பத்திரபீடம்போலுள்ள பூமி, திரவியத்தைக் கொடுக்கும். திருசூலம் போலுள்ளபூமி, வீரனை உண்டுபண்ணும். தனம் முதலிய சௌக்கியங்களைக்கொடுக்கும். லிங்கம்போலுள்ள பூமி, சிவாராதனம் செய்யப்பட்டவர்களுக்கு சிலாக்கியம் அவனும் உப்பரிகைபோலுள்ளபூமி, தன்னுடைய பதத்துக்கு உயர்ந்த பதத்தைக் கொடுக்கும். கும்பம் போன்றபூமி, தனவிருத்தியைக்கொடுக்கும். திருகோணம் போலுள்ள பூமி புத்திர நாசத்தைக் கொடுக்கும். வண்டியைப்போலுள்ள பூமி, சௌக்கிய ஹானியையும், சூரியனைப்போலொத்த பூமி,அர்த்த ஹானியையும்,விசிறியைப்போலொத்த பூமி, மான ஹானியையும், முறனென்கிற அசுரனுடைய திரேகத்திலிருந்து உண்டான பூமியானது வம்ச நாசத்தை உண்டுபண்ணும். ஸர்ப்பம் தப்பளை இதுகளைப்போலொத்த பூமி பயத்தைக் கொடுக்கும். மலைப்பாம்புபோலுள்ளபூமி மிருதியைக் கொடுக்கும். காக்கை கோட்டான் இதுகளைப் போலுள்ள பூமி, துக்கம் சோடபயம் இதுகளைக் கொடுக்கும். ஸர்ப்பமபோலுள்ள பூமி புத்திர பௌத்திரர்களை நாசஞ்செய்யும் அப்படி இல்லாவிடில் பிர்மஹத்தி செய்வதற்கு துணிகரமாகிய பிள்ளைகளைக் கொடுக்கும். ஒணான் பிணம் போலுள்ள பூமி மிகுந்த புத்திரர்களையும் தனநாசத்தையும் கொடுக்கும். பாவிகளால் பிரவேசிக்கப்பட்ட பூமி வம்சத்திலுள்ள ஸந்தான ஸம்பத்துக்களைக் குறைத்துவிடும். மனசுக்கு ரமமியமாயுள்ள பூமி,திரவியத்தைக் கொடுக்கும்.

வடக்கு கிழக்கு இதுகளில் நீருள்ள பூமி, புத்திரர்கள் அர்த்த விருத்தி இதுகளைத்தரும. கம்பீரமுள்ள பூமி, கம்பீர சப்தமுள்ள

புத்திரர்களைத்தரும். உயர்ந்தபூமி, ஒற்றுமையை உண்டுபண்ணும். சரியானபூமி, சௌக்கியத்தைக் கொடுக்கும். காடு முரடானபூமி, அரசாக்ஷி அத்துக்களுக்கு அடங்காது அதாவது, கிரி துர்க்கம் ஜலதுர்க்கம் வனதுர்க்கம் முதலிய இடங்களில் வசிக்கிற சூத்திரர்களுக்கு சுபத்தைக் கொடுக்கும். இதரர்களான திருடர் சங்கர ஜாதியர் முதலானவர்களுக்கும் சுபத்தைக் கொடுக்கும்.

## பூமியின் நிறம்.

வெள்ளை நிறமானபூமி, பிராமணுளுடையது. சிவப்பு நிறமான பூமி, க்ஷத்திரியாளுடையது. பசுமை நிறமானபூமி, வைசியாளுடையது. கருப்பு நிறமுள்ளபூமி, சூத்திராளுடையது. தன் வர்க்க வருணம்போலுள்ள பூமியானது தன் வர்க்கங்களையே பரிபாலிக்கும் வர்க்கங்களின் அதிபர்களையும் இரக்ஷிக்கும். வெளுப்பு வர்ணமுள்ள பூமியானது எல்லா வர்ணத்தார்களுக்கும் சுபத்தைக் கொடுக்கும். புத்திர பௌத்திரர்களையும் விருத்திபண்ணும். நாணல் உள்ளபூமியானது புத்திரர்களையும் பிர்மவர்ச்சஸையும் உண்டுபண்ணும். பலன்களோடு கூடிய பூமியானது தனம் புத்திரர்களையும் கொடுக்கும். ஆற்றோரத்திலுள்ள பூமியானது மூர்க்கர்களாயும் மிருதாளாயுமிருக்கிற புத்திரர்களைக்கொடுக்கும். நதிமத்தியிலுள்ள பூமிதரித்திர புத்திரர்களைக்கொடுக்கும். பொந்துள்ள பூமியானது வாதாடக்கூடிய பிள்ளைகளைக்கொடுக்கும். வெளுப்புள்ள பூமியானது வியாதி உள்ள புத்திரர்களைக்கொடுக்கும், ஸௌக்கிய ஹானியையச்செய்யும். கோணல் அதிகக்கோணலுள்ள பூமி வித்தைக்குறைவான புத்திரர்களைக்கொடுக்கும். முறம், பூனை, இவைகளைப்போலொத்த பூமியானது பயம் புத்திரபீடை இவைகளைத்தரும் உலக்கையைபோலொத்த பூமியானது பயம் புத்திரபீடையையும் வம்சஹானியையும் செய்யும். பயங்கரமான பூமி பயத்தைக்கொடுக்கும். அதிகக் கரிசலுள்ள பூமியானது பசுஹானியைக்கொடுக்கும். மேடுபள்ளமுள்ள பூமி கோணலாயுள்ள புத்திரர்களைத்தரும். அதெப்படியென்றால நாய் நரிக்கு சமானமானவர்களாய் இருப்பார்கள். எரிவுள்ளபூமியானது கெட்டவார்த்தைகளைச்சொல்லுகிற புத்திரர்களைத்தரும் நாச்சந்துள்ள பூமியானது எஜமானனுக்கு அபகீர்த்தியை உண்டுபண்ணும். புத்துள்ள பூமியானது பயத்தை உண்டுபண்ணும்

விபத்துக்கள் அநேகம் உண்டாகும் துஷ்டர்கள், வீட்டுக்குச்சமீபத்திலுள்ள பூமியானது, புத்திரமரணத்தைக்கொடுக்கும். தேவாலயத்தில் இருக்கிற பூமியானது. படபடப்பை உண்டுபண்ணும், மந்திரியின் வசத்திலுள்ள பூமியானது, அர்த்தஹானியைத்தரும் பள்ளமுள்ள பூமியானது, அதிக ஆபத்தைக்கொடுக்கும் ஆமைமுதுகுபோலுள்ள பூமியானது நாசத்தைத்தரும்.

## பூமி பரிக்ஷை.

வீடுகட்டவேண்டிய இடத்தில் பூமியை ஒருமுழ சதுரம் பள்ளமாய் வெட்டி அந்தப்பள்ளத்தை மறுபடியும் மூடினால் மண் அதிகப்படில் சிலாக்கியம், சரியாயிருந்தால் மத்திமம் குறைவாயிருநதால் அதமம்.

ஒரு முழச்சதுரம் தோண்டி அந்த பள்ளத்தை ஜலத்தினால் பூர்ணம் செய்து எப்போதும் போல நூறு அடி நடந்துபோய் அப்படியே திரும்பிவந்து பார்த்தால் ஜலம் குறையாமலிருந்தால் உத்தமம்.

ஒருமுழச்சதுரம் குழிவெட்டி நாலுபக்கமும் செவ்வையாய் மெழுகி சுடாதசட்டியில் நெய்யைவிட்டு நாலுபக்கமும் திரிபோட்டுகொளுத்திவிட்டால் குழி முழுதும் இருட்டில்லாமலிருந்தால் உத்தமம் அப்படி யெரியப்பட்ட திரிகளை கிழக்கிலிருந்து எடுக்கவேண்டும் பிராமணனுக்கு கிழக்கு க்ஷத்திரியனுக்கு மேற்கு சூத்திரனுக்கு வடக்கு இநததிக்குகளிலிருந்து எடுக்கவேண்டும்.

வீடுகட்ட உத்தேசிக்கும் நிலத்தை கலப்பையைபக்கட்டி உழுது அதில் எல்லாவிதைகளேயும் விதைக்கவேண்டும். மூன்று அல்லது 5, 7, இந்த நாளைக்குள் முளைக்காவிட்டால் அந்த பூமி நல்லதல்ல மூன்று நாளைக்குள் முளைத்தால் உத்தமம், ஐந்து நாளைக்குள் முளைத்தால் மத்திமம். 7-நாளில் முளைத்தால் அதமம், 7-நாளைக்கு மேலும் முளைக்காவிட்டால், அந்த பூமியில், ஆலயம் வீடு முதலியவைகள் கட்டக்கூடாது.

எள்ளு கடுகு இவைகளை விதைக்கவேண்டும் இல்லாவிட்டால் எல்லாவிதைகளையும் கலந்து நாலுபக்கமும் விதைக்கலாம். எந்த இடத்தில் கலந்து விதைக்கபபட்டதோ அந்த பூமியில் 3, 5, 7, நாளில் முளைக்காவிட்டால் அந்த பூமி எந்தவிதத்திலும் கூடாது, தள்ளி விடவும் தன்னைவிட்டு நீக்கிவிடவேண்டும்.

வரகு, பாசிப்பயிறு, கோதுமை, கடுகு, எள்ளு, யவை நெல்லு, இந்த 7 விதைகளையும் இன்னும் சமஸ்த விதைகளையும் கலந்து விதைக்கலாம்.

வீடுகட்ட உத்தேசிக்கப்பட்ட இடத்தில் நின்று அவ்விடம் உள்ள புழுதியை கொஞ்சம் அள்ளி உயரத்தில் விட்டு மேலேபோனால் ஊர்த்துவகெதி நடுவில் சுத்தினால் மததிமகதி கீழேபோனால் அதோகதி இப்படிப்பட்ட பலத்தைத்தரும்.

வாஸ்து பூஜை செய்யும் போது அந்த இடத்தில் ஒரு குழி வெட்டி, அதில் 3 அல்லது 5 ஸுமங்கலிகளினால் ஜலம் கொண்டு வரப்பட்ட ஜலத்தை அவர்களால் அக்குழியில் விடும்படி செய்து அதில் புஷ்பததைப்போட்டால் அந்த நீரானது வலப்புறமாகசுற்றி வருமாயின் உத்தமபலனாக நடக்கும். இடப்புறம் சுற்றி வரின் அந்தமனை முடிவு பெறாததும், தவிர மனைபோடப்பட்ட எஜமானனுக்கும் ஆபத்துக்கள் வரும். குழி கெல்லி ஜலம் விட்டு பரிக்ஷை பார்ப்பதில் உடனே அஸ்திவாரம் பிரித்த மனையாயிருந்தாலும கோடைகாலமாக இருந்தாலும் ஜலம் குழியில் விட்டவுடன் வற்றிப்போம். அப்படிப்பட்ட விஷயத்தில் முகூர்த்தம் செய்ய உத்தேசத்திருக்கும் காலத்திற்கு 150 நாழிகைக்கு முந்தி 1 முழச்சதுரம் வெட்டப்பட்ட குழியில் ஜலத்தைவிட்டு வைத்திருந்து பிறகு முகூர்த்தம் செய்யும்காலத்தில் 6-வது விதியில் கண்டபடி பரிசோதித்து பார்க்கவும்.

குழியில் போடப்பட்ட புஷ்பமானது சுற்றிவந்து கிழக்கில் தங்குமாயின், அதிக சம்பத்தும் புத்திர விர்த்தியும் உண்டாகும்.

அக்கினி திக்கில் நின்றால் பெண்சாதி மலடாவாள். ஸர்ப்பம் திருடர், பயம் உண்டாகும். தெற்கு திக்கில் நின்றால் மரணபயம் நோய் வியாகூலம் முதலியவைகள் உண்டாகும். கன்னியில் நின்றால் ஸகல ஸம்பத்துகளும் உண்டாகும். மேற்கில் நின்றால் ஸகலநன்மைகளும் உண்டாகும். வாயுமூலையில் நின்றால் பலவிதமான வியாதிகளும் பொருள் நஷ்டமும் உண்டாகும். அந்தமனையில் பிசாசுகள் வாசஞ்செய்யும். வடக்கில் வந்து நின்றால், ஸகல ஸம்பத்துக்களும் உண்டாகும். ஈசானியதிக்கில் வந்து நின்றால், அஷ்ட ஐசுவரியங்க

ளுமுண்டாகும். ஸகல சுபங்களும் உண்டாகி மங்களமாய் வாழ்வார்கள். உழுதுபட்ட மாடப்பட்ட நிலத்தில் வீட்டு எஜமானன் ஒருவருஷம் கழித்துப்போய் அந்தப்பூமியைப்பார்த்தால் இந்திரிய புஷ்டி உள்ளவனுகிறுன்.

**வாஸ்துபூஜை செய்யஜலம்கொண்டுவரவேண்டியவிதி.**

வீடுகளுக்கு உள்ளுரிலுள்ள தீர்த்தங்களும் ஆலயங்களுக்கு முகூர்த்தங்கள் செய்ய நான்கு சமுத்திரத்திலுள்ள தீர்த்தங்கள் கொண்டுவரவேண்டும். அல்லது7-புண்யநதிகளிலுள்ள தீர்த்தங்கள் கொண்டுவரவேண்டும். அதுவும் முடியாவிட்டால் அந்த ஊர் எல்லைக்கு 4-பக்கஙகளிலுள்ள புண்ய தீர்த்தங்களை கொண்டுவந்து பூஜை செய்யவேண்டும்

## 2-வது அத்தியாயம்

### சுபசகுனம்.

சுவஸ்தி வாஜனம்,சங்கவாத்தியம், அத்தியயனம்,பூர்ணகும்பம், பிராம்ஹுள்,வீணை, படகவாத்திய துவனி, குழந்தைப் பிள்ளைத்தாய்ச்சி, ஆச்சாரியர்,வாத்தியங்கள்,மத்தளம், நகரார் இதுகள் நல்ல சகுனம்.

வெளுப்பு வஸ்திரம் கட்டிக்கொண்டு வருகிற கன்னிகை, நல்ல ரஸமுள்ள பழங்கள், நல்ல பசுக்கள், புஷ்பங்கள், தங்கம், வெள்ளி, முத்து, பவளம், பக்ஷணங்கள் இதுகள் எதிற்படில் நல்ல சகுனம். அநேகம்,ஒன்று,பல,பசுக்கள்,தலைப்பாகை,சந்தனம், கண்ணுடி, விசிறி,மயில்த்தோகை,மான்,மாமிஸம்,தயிர்,பால்,பல்லக்கு,கொடை,மீன்கள், ஸ்திரீ புருஷர்கள் ,எதிற்படில் ஆயுசு ஐசுவரியம் ஆரோக்கியம் முதலியவைகளை விர்த்தி செய்யும். தாமரைப் புஷ்பம் பகவத்கீதை, பாராயணசப்தம், வெள்ளை எருது, இரட்டைப்பிராமணர்கள், யானை, குதிரை, சுமங்கலி உத்தமஸ்திரீ இதுகளை கிரக நிர்மாணகாலத்தில் கண்டால் தனம் புத்திர ஸௌகம் இவைகளைக் கொடுக்கும். தாஸி, மாவெட்டி, தீபம், புஷ்பமாலை, அலங்காரம் செய்த கன்னிகை, மழையில்லாதிருத்தல், இவைகளை மனை முகூர்த்த கிரகப்பிரவேச காலங்களில் கண்டால் சர்வாபீஷ்டத்தைத் தரும்.

### அபசகுனங்கள்.

துஷ்டவார்த்தைகள், சத்துரு வார்த்தைகள், கள்ளு, தோல், எலும்பு, இரும்பு, புல், உமி. பாம்பு சட்டை, பருத்தி, உப்பு, சேறு

நபும்ஸகன், எண்ணை, மருந்து, மலம், கரும்பு, தானியம், வியாதி யுள்ள மனுஷியன், எண்ணைத்தலையன், ஆசாரஹீனன், சடைவளர்ந் தவன், பயித்தியக்காரன், க்ஷவரம் செய்து கொண்டவன், தலைக்கட்டு இல்லாதவன், வெறகு, இறைச்சல், இரண்டு பக்ஷிகள், நிர்வாண மனு ஷியன், தீப்பிடித்து எரிதல், எரிந்து அணைந்து போதல், இதுகளை அபகாரியம் செய்கிற மனுஷியன் பார்த்தால் அந்த இடத்தில், மா ணத்துக்குச் சமானமான கண்டத்தையாவது உண்டாக்குமென்று சொல்லவேண்டும்.

(குறிப்பு) யாதாமொருவனுக்கு அபசகுனங்கள் உண்டாகி றதோ அவன் அந்த வீட்டைக் கட்டினும் கிரகப்பிரவேசம் செய்யி னும் உபத்திரவம் உண்டாகும். அந்த இடத்தி லவனிருக்கவும் கூடாது வீடு கட்டவும் கூடாது.

## பூமியை பூஜை செய்யவேண்டிய விதி.

கிரகஸ்தன் ஜோதிஷ சாஸ்திரத்தை அனுசரித்து நல்ல தினம வாரம் லெக்னம் முதலிய சுபமுகூர்த்தத்தில் ஸ்நானம் செய்து மடி வஸ்திரம உடுத்தி மதாசாரப்படிக்குள்ள குறிகளை தரித்து கிழக்கு முகமாக ஆசனத்தில் இருந்துகொண்டு பூஜாவிதி விக்கினேசுவர பூஜை செய்து கலசங்களில் ஆவாகனமும் நவக்கிரக பூஜையும்செய்த பிறகு அடியில்கண்டபடி பரீக்ஷிக்கப்பட்ட பூமியில் பசுவின் சாணி யினுல் மெழுகி கோலம் முதலிய அலங்காரங்கள் செய்து பிராமணர் களையும் ஜோதிஷ சாஸ்திரிகளையும் பூஜித்து கிரகஸ்தன் எவ்வளவு பூமி வீடு கட்டுவதற்காக வேண்டுமோ அவ்வளவு பூமியையும் பஞ்ச கௌவியத்தினுலும் ஒஷதி ஜலங்களினுலும் பஞ்சாமிருதத்தினுலும் புரோக்ஷித்துச் சுத்திகா மண்ணினுல் பூமியை சுத்தி செய்து, அந் தப்படி சமஸ்காரம் பண்ணப்பட்ட பூமியில் சுவர்ண கெர்பிதமான கும்பத்தை வைத்து நானுவித பல புஷ்பங்களினுலே அலங்காரம் செய்து நவதானியங்களை கும்பத்துக்கு அடியிலும் போட்டு வாஸ னு பதார்த்தங்களை சேர்த்து சமஸ்தமான ஒஷதிகளினுலே நிறப்பி பல சிவப்பு வஸ்திரம் சாத்தி மந்திரங்களினுலே அபிமந்தரித்து அந் த கும்பத்தில் வருணன் முதலான தேவதைகளையும் ஆகாச சஞ் சாரியான தேவதைகளையும் மலைகள் நதிகள் வனங்கள் இதுகளோடு கூடிய பூமியை ஆவாகனம் செய்தும் அநேக நதிகள் நதங்களோடு

கூடியதாயும் அநேக விருக்ஷங்கள் கொடிகள் புஷ்பங்கள் பழங்க ளாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிற பூமியை தியானம் செய்து அந் தக் கும்பத்தில் பூஜிக்கவேண்டும். பிறகு இந்திராதி தேவர்களையும் வாசுகிமுதலிய அஷ்ட நாகங்களையும் பூஜிக்கவேண்டும். பலியும் விதிப்படி கொடுத்துஜலத்துக்காக விசேஷ நைவேதனம் செய்து (ஷட்ருசம்) என்றமந்திரத்தையும் (ருத்திர) ஜபத்தையும் விதிப் பிரகாரம் செய்து அதில் வாஸ்து புருஷனை பூஜிக்கவேண்டும். (ஓம் நமோ பகவதே வாஸ்து புருஷாய கபிலாயா, பிரதிவீதராயா, தே வாயா பிரதான புருஷாயா) என்று ஸமஸ்கிருத பிரஸாத புஷ்கர உத்தியான கர்மாவினால் பூஜிக்கவும், கிரகாரம்ப பிரதம காலத்தில் ராப்பகலாய் சித்த தேவதைகளையும் மனுஷியர்களால் பூஜிக்கபபட்ட வராயும் ஸமஸ்த ஸித்தியையும் பக்தர்களுக்குக் கொடுக்கக் கூடிய வராயும் இருக்கிற வாஸ்து புருஷரே என்று பிரார்த்திக்கவேண்டும்.

அந்த ஸ்தானத்தில் பிரஜாபதி க்ஷேத்திரத்திலிருக்கிற வாஸ்து புருஷரே! நான் செய்யும் பூஜையை ஏற்றுக்கொண்டு வரதராக அவ் விடத்தில் வாசம் செய்யவேண்டும். ஓய் வாஸ்து புருஷரே உமக்கு நமஸ்காரம் பூமியில் படுக்கையில் விருப்பமுள்ளவரே! ஹே பிரபுவே என்னுடைய வீட்டை எப்பொழுதும் தன தான்யாதிகளினால் நிறை ந்திருக்கும்படி பிரார்த்திக்க பிறகு பூமியில மாவினாலாவது அரி சியினாலாவது வாஸ்து புருஷனை எழுதவேணும் அதெப்படியெனில் ஸர்ப்ப ரூபததை தரித்துக்கொண்டவராயும ஸர்வ வியாபகராயும் தியானித்து எழுதவும்.

பிறகு வேத மந்திரங்களினாலே ஆவாகனம் செய்யவேண்டும். தன்னுடைய சக்திபோல பூஜிக்கவேண்டும். பூமியிலிருக்கிறவராயும் பிரகாச ரூபியாகவுமிருக்கிற வாஸ்து பகவானை ஆவாஹனம் செய்ய வேண்டும்.

ஜகத் பிராணராயும் முன் கீழ்திக்கில் ஆசிரியித்தவராயும் ஸர்வ நாயகராயுமிருக்கிறவாஸ்து புருஷனை "விஷ்ணோர்ராடமஸி" என்கிற மந்திரத்தினால் ஆவாஹனம் செய்யவேண்டும். "நமோ அஸ்து ஸர் வேப்பியகா" என்கிற வேத மந்திரத்தினால் அடிவயிற்றில் ஆயுதத்தி னால் பூஜிக்கவேண்டும்.

# மூன்றும் அத்தியாயம்.

## தேங்காய் சகுனம்.

முகூர்த்தம் செய்யுங்காலத்தில் தேங்காயுடைக்கில் முடி பெருத்து அடி சிறுத்து வட்டமாக உடையில் லக்ஷ்மி விலாஸமுண்டாகும். மூன்று பங்கு சிரஸிலும் அடியில் ஒரு பங்கும் உடைந்தால் சந்தோஷமுண்டாகும். ஐந்தில் இரண்டு பங்கு உடையில் மாளாத செல்வமுண்டாகும்.

உடைந்து நரம்பு பிடித்தால் வாழ்வுண்டாகும். கடுகளவு பிரமாணம் சிதறி உள்ளே விழுந்தால் ரத்தினம்சேரும். நடுவில் பிளந்தால் சண்டையுண்டாகும். சரிபாதியாக உடைந்தால்விசேஷநன்மை உண்டாகும். ஆறு பங்கு நான்கு பங்காக உடைந்தால் விசேஷதுன்பம். கண்கள் தெரித்தல் மரணமுண்டாகும். ஓடு விட்டால் வறுமையுண்டாகும். அழுகல் ஒல்லியாயிருந்தால் அதிக மனஸ்தாபமுண்டாகும்

## சங்குஸ்தாபனம்.

யானைத்தந்தம், ஆலமரம், அத்தி, சந்தனம், தேக்கு, புளி, கருங்காலி, வன்னி, வேங்கை இந்த மரங்களினால் செய்யலாம். உத்தமசங்கு 24 மானங்குலம், மத்திமச்சங்கு 18 மானங்குலம், அதம சங்கு 12 மானங்குலம். உத்தம சங்கு அடி 6 அங்குலம், அகலம் 1 அங்குல அகலம் ஒரு மட்டமாகவும், விருத்தமாகவும் கடைந்துக்கொள்ளவும். அதேவிதம் மத்திப அதம சங்குக்கும் முக்கால் பங்கு அரைப்பங்கு வீதம் வைத்துக்கொள்ளவும். சங்கு செய்யப்படும் மரங்களில் கணுபோரை புள்ளி நெளிவு இருக்கப்பட்டது கூடாது. இதில் தேவர்களுககு தந்தம் சந்தனம், அரசர்களுக்கு கருங்காலி வன்னி, வைசியர்களுக்கு, வேங்கை, தேக்கு, சூத்திராளுக்கு புளி அத்தி, உத்தமம். இவையில்லாத மரங்கள் கூடாது. சங்குஸ்தாபனம் பண்ணவேண்டிய இடத்தில் 4 முழ நீளம் 4 முழ அகலம் நீர் மட்டத்திற்குச் சரியாய் பூமியை சதுரமாக வட்டஞ்செய்து நல்ல முகூர்த்தத்தில் சங்குவை ஜலத்தினால் அலம்பி மஞ்சல் குங்குமம் சந்தனம், புஷ்பத்தினால், அலங்கரித்து ஷை பூமியில் நிறுத்தி பூஜை செய்து ஷை சங்குமத்தி முதல், விதிப்படி மண்டலம் போட்டு ஷை

வட்ட மண்டல மேற்புறத்திலேயே உயர்த்தியாகப் பார்க்கும்போது ஷெ சங்குச்சாயை மேற்புறத்திலேயே விருத்தமண்டலத்தின் புருவத்தில் தொட்டவுடன் கால்முழம், ஒருமுழம், இரண்டு முழம், ஒவ்வொரு பாகத்திலும் இருக்கும்போது மூன்று மண்டலம் போடவும் அதில் புள்ளடி போட்டு உத்தராயணம் தக்ஷிணாயனம் அறிந்து விலக்குவதும், அதே விலக்கு மேற்பக்கத்து புள்ளடிக்கும் குறி வைத்து நூல் பிடித்துப்பார்த்து கழிக்கக்கிழக்குமேற்காம், ஆவணி, ஐப்பசி, கார்த்திகை இந்த மூன்று மாஸங்களிலும் சங்கு நடல் மனிதர்க்காம் மற்ற மாதங்கள் தேவர்கட்காம்.

## வேறு விதம்

மனைக்கு தெற்கு வடக்கு கிழக்கு மேற்கு அறியவேண்டிய கருவி, மேருமையத்துருவத்தை நோக்கி தன்னுடைய நேத்திரத்திலுலே பூமியிலேகூடியவரையில் நிதானித்துப் பார்த்து மையமாகக் கீறி அதற்கு தெற்கே தான் நின்ற மையத்துக்கும் துருவமையத்துக்கும் நூலைப் பிடித்துப் பார்க்கில் தெற்கு வடக்காம். அதை சதுரம் செய்யில் கிழக்கு மேற்காம். இந்த மனை கிழக்குப்பார்க்க இருக்கில் ஈசான்ய மூலை தானே ஈசான்யம் பார்க்கவேண்டும இது தெற்குப்பார்க்கில் மேற்கு மூலை கன்னியைப் பார்க்கவேணடும.

## துருவ நக்ஷத்திரம் காணும் வழி.

துருவ நக்ஷத்திரமென்பது அதிக வடக்கிலுள்ளது. அது அசையக் கூடியவையல்ல, அந்த நக்ஷத்திரத்தைக்கொண்டு நேர் வடதிசையைக் காணலாம். அந்த நக்ஷத்திரததை, சப்தரிஷி மண்டலம என்று சொல்லப்பட்ட ஏழு நக்ஷத்திரம் துருவ நக்ஷத்திரத்தைச் சுற்றி யோடுகிறது. சப்தரிஷி நக்ஷத்திரமானது அடியில்காட்டியபடி இருக்கும். அதில் முன்னால் இருக்கப்பட்ட இரண்டு நக்ஷத்திரங்களும் துருவ நக்ஷத்திரத்தைக் காட்டிக்கொண்டே இருக்கும். அந்த இரண்டு நக்ஷத்திரத்துக்கும் உள்ளதூரம் எவ்வளவோ அவ்வளவுக்கு 7 பங்கு கொண்ட தூரம் சப்தரிஷி நக்ஷத்திரத்துக்கும் துருவ நக்ஷத்திரத்துக்கும் உள்ள தூரம்.

## சப்தரிஷி நக்ஷத்திரம்.

*துருவ நக்ஷத்திரம்

குறிப்பு:—சங்கு நடுதல், துருவ நக்ஷத்திரம் பார்த்துச் செய்தல், திசை காட்டும் கருவியைக்கொண்டும் நிதானித்தல், இம்மூன்றில் எவற்றைக்கொண்டாவது திசைகளை நன்றாய் நிதானித்துச் செய்தல்வேண்டும்.

### மனை முகூர்த்தம் செய்யுமிடமறிய

மனையின் அகலத்தை 28 பங்கு செய்து காலில் 17 பங்கு தலையில் 10 பங்கு தள்ளி நடுவில் நின்ற ஒரு பாகத்தில் மனை முகூர்த்தம் செய்யவும்.

### மண்வெட்டிச் சகுனம்.

மனைகோலக்கொண்டுவந்த மண்வெட்டியானது முனை முறிந்திடினும், மடங்கினும், கயிறுஅறுந்திடினும், கூடாது. உயிர்ச்சேதம் பொருள் சேதம் உண்டாகும். எப்பொழுதும் கஷ்டமே தவிர சகமிராது (கயிறு) பட்டுநூல் முப்புரியாகச் செய்யப்பட்டது. க்ஷத்திரியர்க்காம், பருத்திநூல் முப்புறிக் கயிறு வைசியர்க்காம். பனை நார் தென்னை அகணி சூத்திரர்க்காம் பருத்தியினல் முப்புரியாகிய கயிறு நான்கு ஜாதிக்கும் பொதுவாகக்கொள்வது விதியாம்.

### முளை நீளம்.

பதினொரு விரல் முதல் இருபத்தாறு விரல் வரையில் இசைந்தபடி வெட்டிக்கொள்ளலாம்.

### முளை அடித்தல்.

முதலில் வயிற்றில்கெல்லி பிறகு தென்மேற்கு மூலையிலிருந்து பிறகு தென்கிழக்கு, வடகிழக்கு வடமேற்கு மூலைகளில் அடிக்கவும் அடித்த முளையை பிடுங்கி ...டுத்தாலும் முறியினும் தலை சிறாயினும் கெடுதலுண்டாகும்.

## மனை கோலத் தூரமறிய.

ஆற்றங்கரைக்கு 50 அடி, ஊருணிக்கு 25 அடி, கிணற்றுக்கு 17 அடி தள்ளிப் போடவும் அப்படிக்கு இல்லாவிடில் கெடுதலுண் டாகும்.

இரண்டு மனைகளை நூதனமாய்ச் சேர்த்து வீடு கட்டவேண்டு மானாலும் கட்டின வீட்டுடன் இன்னொரு மனை சேர்த்துக்கட்ட வேண்டுமானாலும், கட்டப்பட்டிருக்கிற வீட்டையும் இடித்து காலி செய்து இரண்டு மனைகளாயிருந்தாலும், மனையைக் கொத்தி நவதானியங்களை விதைத்துப் பயிர் செய்து பயிரானவுடன் அந்தப் பயிரை பசுக்களை விட்டு மேய்ப்பித்து, மூன்று நாள் பசுக்களை அதில் வசிக்கச் செய்து நவக்கிரகஹோமம், பிராமண போஜனம் முதலிய வைகள் செய்து அந்த இடத்தில் மனை கோலில் மனை கோல்பவர் களுக்கு விசேஷ நன்மையுண்டாகும். இல்லாவிட்டால் விசேஷ துன்பமுண்டாம்.

## வீட்டில் நுழையும்போது தோற்றக் கூடாதவை.

உத்திரம் தண்டியம் இவைகள் வாசற்படிக்கெதிரில் இருத்தல், மூற்றத்தின் மூலை, வாரிகுத்தல் கட்டைச் சுவர் தூண் இவைகள் வாசற்படிக்கு எதிரில் தோன்றப்படுமாயின் உயிர்சேதம் பொருள் சேதம் உண்டாகும். அல்லது அடிக்கடி கலகம் உண்டாகும்.

**ஒரு வீட்டை** இரண்டாய்ப்பிரித்தல், கூடாது. அப்படிப் பிரிக்கில் கலகம், நஷ்டம், பொருள்ச்சேதம் உண்டாகும்.

## வீட்டை ஈசான்யத்திருப்புதல்.

ஒரு அங்குலத்துக்கு மேற்படாமல் திருப்புதல் உத்தமம். 6 அங்குலம் வரையில் மத்திமம். அதற்கு மேற்படில் சௌக்கிய குறை வாயிருக்கும்.

சூரியவாஸ்து கிழமேல் நீளமாயிருப்பது. சந்திரவாஸ்து தென்வடல் நீளமாயிருப்பது.

## வாஸ்து புருஷ லெக்ஷணம்:-

வாஸ்து புருஷன் எந்த ராசியில் சூரியன் வசிக்கிறானோ அந்த ராசியில் காலை நீட்டி அதற்கு 7-வது இராசியில் சிரசு வைத்துக் கொண்டு இடதுகை கீழ்புறமாக படுத்திருப்பார்.

அப்படி படுத்திருக்கும்போது காற்புறத்தில் முகூர்த்தம் செய்யின் மனையாள் மரணம், தலைப்பக்கம் ஏஜமானன் மரணம், பின் பக்கம் ராஜபயம். ஆகையால் எந்த திக்கைப் பார்த்து படுத்திருக்கிருனே அந்த திக்கின் முகமாய்ப் பார்த்து மனை முகூர்த்தம் செய்தலும் நிலை வைத்தலும் உத்தமம். எழுந்திருக்கும்போது எல்லா திக்கு முகமாயும் செய்யலாம்.

பங்குனி, சித்திரை, வைகாசி இந்த மூன்று மாசமும் மேற்கே சிரசாகவும், ஆனி, ஆடி, ஆவணி, இந்த மூன்று மாசமும் வடக்கே சிரசாகவும், புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, கிழக்கே சிரசாகவும், மார்கழி, தை, மாசி, இந்த மூன்று மாசமும் தெற்கே சிரசாகவும், நித்திரை செய்வார். சூரியனிருக்கும் ராசியில் காலும் அதற்கு ஏழாவதுராசியில் சிரசும் இடக்கை கீழ்ப்புறமாக வைத்துக்கொண்டு வாஸ்து புருஷன் நித்திரை செய்வான்.

## வாஸ்துபுருஷன் நித்திரைவிட்டெழுந்திருக்குங்காலம்

சித்திரை மாஸம் 10வ நாழிகை 5, வைகாசிமாசம் 21வ நாழிகை 8, ஆடிமீ 11வ நாழிகை 2, ஆவணிமீ 6வ நாழிகை 21, ஐப்பசி 11வ நாழிகை 2, கார்த்திகைமீ 8வ நாழிகை 10, தைமீ 12வ நாழிகை 8, மாசிமீ 20வ நாழிகை 8-க்குமாம்.

இந்தநாழிகைக்குமேல் $3\frac{3}{4}$ நாழிகை வாஸ்து புருஷன் நித்திரைவிட்டிருக்கிறகாலம். அந்த $3\frac{3}{4}$ நாழிகையை ஐந்துபாகமாய் பிரிக்க முதல் முக்கால் நாழிகையில் தந்தசுத்தி, இந்த ஸமயத்தில் முகூர்த்தம் செய்தால் அரசரால் பயமுண்டாகும். இரண்டாவது ஸமயம் முக்கால் நாழிகை, ஸ்நானம் செய்வான் அதில் முகூர்த்தம்செய்தால் பீடையுண்டாகும். மூன்ருவது ஸமயம் முக்கால் நாழிகை பூஜை, அதில் முகூர்த்தம் செய்தால் வறுமையுண்டாகும். நான்காவது ஸமயம் முக்கால் நாழிகை போஜனம் இதில் செய்தால் புத்திர சம்பத்துண்டாகும். ஐந்தாவது ஸமயம் முக்கால் நாழிகை அரசு, இதில் முகூர்த்தம் செய்தால் ஸகலசம்பத்துண்டாகும். உத்தம பலனுக நடக்கும்.

(குறிப்பு) சூரிய உதயம் இத்தனைமணிக்கென்று தெரிந்துகொண்டு நிதானித்து கணக்குசெய்யவேண்டும். மற்ற மாசங்க

ளில் வாஸ்து புருஷன் நித்திரைவிடுவதில்லை. அதில் மனைமுகூர்த்தம், கிரகப்பிரவேசம் இதுகள் செய்யக்கூடாது. சிலநூல்களில் மாசிமீ'த்தில் 22, 21, 12, இந்த மூன்று தேதிகளிலும் 20-வ-யும் குறிக்கப்பட்டிருக்கிறது.

பலபுஸ்தகங்களையும் ஆராய்ந்து பார்த்தும் கடைசியாக சுமார் 60, 70, வருஷத்திற்கு முந்தி ஓலைச்சுவடியில் எழுதப்பட்ட சூடாமணி உள்ளமுடையானில் மாசிமீ' 20வ- குறிக்கப்பட்டிருக்கிறபடியால் அந்த 20வ-ந்தேதியே சரியெனத்துணிந்து எழுதலானேன். வாஸ்து எழுந்திருக்கும் ஸமயம் எவ்வித தோஷமான நாட்களாயிருந்தாலும் பாதகமில்லையென்று சொல்லப்பட்டிருக்கிறது. வாஸ்துபுருஷன் மாசி மீ'த்தில் நித்திரைவிட்டு எழுதலைப்பற்றி தெரிந்தவர்கள் அவர்கள் அபிப்பிராயப் படிக்குள்ள தேதிதெரிவிக்கக்கேட்டுக்கொள்ளுகிறேன்.

## மனை கோல்பவருடைய பக்ஷியைக்கொண்டு பலன் சொல்லல்.

ஊண்:— முதல் விஞடியின் பலன் முன்னூறு வருஷகாலம் அதிகசுகமாக வாழ்ந்திருப்பார்கள்.

2-வது விஞடியின் 250 வயது சல்லியம் ஒன்றுமில்லை அதிக வாழ்வுண்டாம்.

3-வது விஞடி 200 வருஷகாலம் சுகமாக இருப்பார்கள். ஒரு குறையும் வராது வம்சம் விருத்தியாகும்.

4-வது விஞடி 18 வயது சவுக்கியமாக வாழ்ந்திருப்பார்கள்.

5-வது விஞடி 25 வருஷகாலம் சிறுமைவாராது நல்ல சுகமான போஜனம் கலியாண முதலியது கைகூடும்.

நடை:—முதல் விஞடியில் மனை முகூர்த்தம் செய்தால் 100 வயது வாழ்வு சுகம் அதிகமில்லை. கன்னமிடப்படும் களவு முதலியவைகள் போகும் மனதுக்குக் கலக்கம் உண்டாம்.

நடை:- 2-வது விஞடியில் தொண்ணூறு வருஷம் சுகதுக்கம் மாறிவரும். வாழ்வு மணம்சுருக்கமாய்த்தான்நடக்கும்.

நடையில் மூன்றும் விஞடியின் பலன் எண்பது வயது களவு போகும், 30 வருஷத்துக்குள் ராஜ தண்டம்வரும் பொல்லாதவன் என்று பேர்படுவன்.

நடையில் நான்காம்:-விநாடியின் பலன் எழுபது வருஷம் சல்லியம் ஒழியாது துன்பமுமதிகம் சண்டையும் வெகு கொடுமையுண்டாம். சகிக்க முடியாது. அரசரது பகையுமுண்டாகும். கொஞ்சகாலத்தில் தீபங்கூட இல்லாமல் அடைபடும்.

நடை ஐந்தாம் விநாடியின் பலன்:—அறுபது வருஷம்வரையில் வாழ்வு கொஞ்சம் பெண்டீர் சேதமுண்டாம். நன்மையான காரியங்கள் செய்ய மனம் வரமாட்டாது. தேகத்தில் வியாதிகாளும் சத்துருக்கள் அதிகம்.

## அரசில் முதல் விநாடியின் பலன்.

ஆயிரம் வருஷ வாழ்வை நாவினால் சொல்லமுடியாது. யானை, குதிரை, கட்டி வாழப்படும் பல்லக்கு முதலிய வாகனங்கள் உண்டாகும்.

அரசின் இரண்டாம் விநாடியின் பலன்:—எண்ணூறு வருஷம் மகிழ்ச்சி செல்வம் அதிகமுண்டாகும். மங்களமாக வாழ்வார்கள். அரசர்கள் உரவுண்டாம். ஜனக்கூட்டம் அதிகமாகும். எப்போதும் லக்ஷிமி வாசமாயிருப்பாள்.

அரசின் மூன்றாவது விநாடி பலன்:—அறுநூறுவருஷகாலம் மகிழ்ச்சி அதிகமாகயிருக்கும். ராஜாக்கள் வந்திருப்பார். பிரபுக்கள் சினேகமுண்டாகும். வெகு தாரம்பேருண்டாகும். லெக்ஷிமீ கடாக்ஷமுண்டாம். ராஜாக்களுக்குச்சமதையாயிருப்பான்.

அரசின் நாலாம் விநாடி பலன்:—நாற்றைம்பது வருஷம் வரையில் வாழ்வதிகம். குபேரனுக்குசமதையான செல்வம் உண்டாம். பந்துக்கள், விருத்தியாவார்கள் குலம் பிரபலமாகும். வெகு ஜனங்களால் கொண்டாடப்படுவன், குதிரை முதலிய வாகனங்கள் அல்லாமல் கால் நடையாய் திரியமாட்டான்.

அரசின் ஐந்தாம் விநாடியின் பலன்:— நானூறு வருஷகாலம் செல்வத்தை நாவினால் சொல்லமுடியாது. நல்ல ஸ்திரீகள் சேர்க்கையுண்டாம். பொருள் உடமைகள் கைவசமுண்டாம். சத்துருக்கள் இல்லை.

நித்திரை முதல் விநாடியின் பலன்:— 50 வருஷம் கொள்ளை, அக்கினி பயமுண்டாகும். ஜனங்கள் உதவி செய்யமாட்டார்கள்.

க்ஷண நேரம் கூட சந்தோஷமில்லை. துன்பம் அதிக முண்டாம் சொல்லமுடியாது.

நித்திரை 2-வது விஞடியின் பலன்:— 40 வருஷத்துக்குள் தன்னாலே அழிந்துவிடும், நெருப்பினால் பாதையுண்டாம் ஜனஉதவி இல்லை. சுகம் இல்லை நோய் உண்டாம். முகத்தில் மூதேவி வாச மாயிருப்பாள்.

நித்திரை 3-வது விஞடி:— 35 வருஷம் பாழடையும் சுகமே இல்லை. உரவில்லை. பிள்ளையில்லை. நினைத்த காரியங்கள் கைகூடாது நன்மை யொருநாளும் வராது.

நித்திரை 4-வது விஞடி:— 30 வருஷகாலம் மனை பாழாகும் சொல்லமுடியாத துயரமுண்டாகும். பொருள், சுகம், புத்திரர் வாழ்வு கிடையாது. பீடைகளுண்டாகும்.

நித்திரை 5-வது விஞடி:— 20 வருஷகாலம் பாழடையும், தீபம் இல்லை. பிறர் உதவி கிடையாது. துன்பம் நீங்காது சத்துரு பகையுண்டாகும். மூதேவி வாசமாயிருப்பாள்.

மரணத்தின் முதலாம் விஞடியின் பலன்:— 20 வருஷம் அதற்குள் பாழடையும் துன்பம் அதிகம் உண்டாம் வாழ்வில்லை. ஐந்து வருஷத்திற்குள் தானே அழிந்துபோம்.

மரணத்தின் 2-வது விஞடியின் பலன்:— பத்து வருஷத்துக்குள் மனையிலுள்ள குடிகள்குலைந்துபோம் குடியிருக்கமாட்டார்கள் விஷத்தினால் மரணபயமாம், தெண்டனை, பொருட்சேதமுண்டாம். துயரம் அதிகம் உண்டாம். ஜன உதவி கிடையாது.

மரணத்தின் மூன்றும் விஞடியின் பலன்:— ஐந்து வருஷத்துக்குள்ளே கொள்ளை போகும். குடியேறல் ஒரு நாளுமில்லை. மனை கோல்பவன் மரணமாவான் ஒரு நாளும் சுகமில்லை மூதேவி வாசமாயிருப்பாள்.

மரணத்தின் நான்காம் விஞடியின் பலன்:— மூன்று வருஷத்துக்குள் குடியேறல் ஒரு நாளுமில்லை. கர்த்தாவுக்கு மரணபயம் உண்டாம் அப்படி இல்லாவிட்டால் இவனுக்கு முகூர்த்தம் செய்த காலமுதல் தீராத்துயரம் உண்டாம்.

மாணத்தின் ஐந்தாம் விருடியின் பலன்:— ஒருவருடைய காலத்திற்குள் கர்த்தா இறந்து போய் விடுவன், குடும்பம் பலவிதமாய் அழிந்து விடும் நாவினால் சொல்லமுடியாத துயரம் உண்டாம்.

குறிப்பு. பக்ஷியையும், வாஸ்து எழுந்திருக்கும் சமயத்தை யாவது, முகூர்த்தம் செய்ய உத்தேசிக்கும் சமயத்தையாவது ஒத்திருக்கிறதாவென்றும் பார்த்துச் செய்யலாம்.

## சரசாஸ்திரம்.

சரசாஸ்திரத்தில் சொல்லிய பிரகாரம் பஞ்சபூதியத்தின் காலத்தைக்கண்டறிவது கஷ்டமானபடியால் தனக்கு சந்திரகலை அல்லது இடது நாசியில் சுவாசம் வரும்போது செய்ய உத்தமம், வலது நாசியில சூரிய கலை நடக்கும்போதும் மத்திபம். இரண்டு நாசியிலும் சுவாஸம் ஓடுவதற்கு சுழிமுனை என்று பெயர். அந்த காலத்தில் மனை போடுதல் கூடாது. இதையும் கவனிக்க வேண்டிய விஷயம் தான்.

## மாஸங்களின் கால வார்ப்பகெதி.

ரிஷபம், கடகம், மிதுனம் இந்தமூன்றிலும், இடுப்பும், ஈசான்னியத்தில் சிரசும், வாயு மூலையில் கழுத்தும், நிருதி மூலையில்வாலும், இதன் பின் பக்கத்தில் சிம்மம், கன்னி, துலாம், இந்த மூன்று மாசங்களிலும் வாயு மூலையில் சிரசும், நிருதி மூலையில் இடுப்பும், அக்கினி மூலையில் வாலும், இதன் பின் பக்கமாகவும் விருச்சிகம், தனுசு, மகரம், இந்த மூன்று மாசங்களிலும் அக்கினி மூலையில் சிரசும், ஈசான்னிய மூலையில் இடுப்பும், வாயுமூலையில் வாலும், இவ்விதமாக இருக்கும். இடுப்பில் ஸ்தம்ப பிரதிஷ்டை செய்யில் உத்தமம் தலையின்மேல் செய்யில் மிருத்யு பயம், முதுகின் மேல் செய்யில் கெடுதி, வாலில் செய்யில், அடிக்கடி சலனமுண்டாம், இப்படி இல்லாமல் ஸ்தம்ப பிரதிஷ்டை செய்யவும்.

வாஸ்து பூஜை செய்த பிறகு, வேதமந்திரங்களினால் வாஸ்துவினுடைய அடிவயிற்றில் வெட்டவேண்டும். பங்குனி-மீ முதல் மூன்று மாஸம், ஆனி-மீ முதல் மூன்று மாஸம், புரட்டாசி மீ முதல் மூன்று மாஸம், மார்கழி-மீ முதல் மூன்று மாஸம், கிரமமாக

வாஸ்து புருஷன், படுத்திருக்கும் திக்கின் பார்வையில் மனை கோலி னும் நிலைவைக்கினும் சுபமுண்டாகும்.

பங்குனி முதல் மூன்று மாஸம் வடக்கு, ஆனி முதல் மூன்று மாஸம் கிழக்கு, புரட்டாசி முதல் மூன்று மாஸம் தெற்கு, மார்கழி முதல் மூன்று மாஸம் மேற்கு, இந்த திசைகளைப்பார்க்கமனைமுகூர்த் தம் செய்தல், வாசல்படி வைப்பது உத்தமம். வாஸ்துவின் தலை யில் வெட்டினால் எஜமானன் நாசத்தை அடைகிறான். பின் பக் கத்தில் தாய் தகப்பன் நாசத்தையடைகிறான் காலில் ஸ்திரி நாசம், வயத்தில் வெட்டினால் சமஸ்தமும் உத்தமபலனாக நடக்கும்.

## சந்திரன் நிற்கும் திசையறிந்து கட்டவேண்டியது.

கார்த்திகை முதல் 7-நக்ஷத்திரம் கிழக்கினும் மகம் முதல் 7-நக்ஷத்திரம் தெற்கினும் அனுஷம் முதல் 7-நக்ஷத்திரம் மேற்கி னும், அவிட்டம் முதல் 7-நக்ஷத்திரம் வடக்கினும், இருப்பான். தன்னுடைய நக்ஷத்திரத்துக்கு முகூர்த்தம் செய்யும் நக்ஷத்திரம் எதிரிலிருந்தால் எஜமானனுக்குபயம், பின்னால் இருந்தால்வேலைக் காரர்கள் வேலைசெய்வார்கள். வலது பக்கத்தில் இருந்தால் தனம் தானே கொடுப்பார்கள். இடது பக்கத்தில் இருந்தால் ஸ்திரீசம் பத்துக்கள் உண்டாம். முக்கியமாய் எதிரினும் பின்பக்கத்தினும் சந்திரன் இருக்கக்கூடாது. இடதுபக்கம் வலதுபக்கம் சுபத்தைக் கொடுக்கும். இரும்புத்தடியையும் பைரவரையும் திக்கு பாலகரையும் பூஜித்து பூமியையும் நமஸ்காரம் செய்தல் வேண்டும். பிறகு (சிவோநாம:) என்ற மந்திரத்தினால் உமாசகாயரான ஈசுவரனை (சிவர்த்தயாமி) என்றுரிக்கினால் பூஜிக்கவேணும், பெலமான இரும் புத்தடியினால் வாஸ்து புருஷனுடைய அடிவயற்று ஸ்தானத்தில் வெட்டல் வேண்டும். எவ்வளவுதூரம் அந்த இரும்புத்தடி செல் லுகிறதோ; அவ்வளவுகாலம் வரையினும் வாஸ்து புருஷனுக்கு இரு ப்புநேரிடும்.

அப்படி வெட்டிய இரும்புத்தடியை ஒருவஸ்திரத்தினால் மூ ஒருபிராமணனுக்கு தக்ஷிணைதாம்பூலத்துடன் கொடுக்கவேணு அப்படிக்கொடுக்கும்போது வாங்குகிறபிராமணன் கைகால்க நீட்டிவாங்கினால், அது ஒத்தப்படையாயிருந்தால் பிள்ளைகள்,

பேரன்களுண்டாம். இரட்டைப் படையாயிருந்தால் பெண்கள், பேத்திகள் உண்டாகுமென்றும் சொல்லவும்.

கெடி இரும்புத்தடியை வீடுகட்டுகிறதம்பதிகளுக்கு காட்டவேண்டாது. அப்படி காட்டுகிற காலத்தில் நல்லவார்த்தைகள் அழகான ஸ்திரீ, புருஷர்கள் திருஷ்டியில்படவேணும். அந்த சமயத்தில் வேதகோஷ்டங்கள், கீதநிரத்தங்கள், அபூர்வமாயிருக்கிற, புஷ்பங்கள், புல்லாங்குழல், வீணை, மத்தளம், இதுகளைகாதினால் கேட்கிறதும், கண்ணினால் பார்க்கிறதும், சுபம், தயிர், கல்யாண திரவியம் தங்கம், வெள்ளி, முத்து, தாமிரம், பவளம் இதுகளைதெரிசனம் செய்யவேணும். மணிகள், ரெத்தினங்கள், வைடூரியம், ஸ்படிகம், நல்லருசியுள்ள கந்தமூலங்கள் எந்தபூமியில்இருக்கிறதோ அந்தபூமி சுகத்தைக்கொடுக்கும். முள்ளு, பேரீச்சமரம், தேன், பூச்சி, முதலிய ஜந்துக்கள் ஜனிக்குமிடம் செல்லு, மயிர், நகங்கள், கரி, எலும்புமுள்ள இடங்களும், உப்புமண்ணுள்ள இடமுங் கூடாது.

## சுவப்பனவிதி

விக்கினேசுவரர், இந்திராதிலோகபாலகர்கள், பூமி, ஆதித்தியாதி நவக்கிரகதேவதைகளையும், ஜலத்தில் யதாசக்தி, மந்திரலோபமில்லாமல் பூஜித்து கல்பத்தில் சொன்னபடி உபசரித்து, சுத்தமான இடத்தில் தர்ப்பாசனத்தில் இருந்துகொண்டு பூமியில் வெள்ளை வஸ்திரத்தை விரித்துப்போட்டு சிரசில் ஸ்ரீயை பூஜிக்கவேண்டும். மகாலெக்ஷமி பத்திரகாளி இவர்களை பூஜித்து நைவேதனம் செய்து ஸர்வ பீஜங்களோடுங்கூடி யதாபூமிருக்கிற கும்பங்களை பூஜிக்கவேண்டும்.

கும்பங்களை சுக்தோசத்தினால் பூர்த்திசெய்து பூர்வோக்த தேவதைகளை ஆவாகனம் செய்து சுவஸ்திவாஜனம் முதலியதுகளால் உபசரித்து பூஜிக்கவும். ஓமமனதுடையவனுய் பட்டுமடிகட்டிக் கொண்டு கிழக்குமுகமாக இருந்து இருதயத்தில் **(ருத்திர ருத்திர)** என்னும் மந்திரத்தை விதிப்படி ஜபிக்கவேண்டும். **(ஷட்ரிக்கையும்)** ருத்திரஜபத்தையும் ஓமமனமுடையவனாக இருந்துகொண்டு ஜபிக்கவேண்டும், வெண்பட்டு முத்துஹாரம் இதுகளைத்தரித்துக்

கொண்டு பிராமணர்கள் ஜோதிஷர்கள் புரோகிதர்கள் தன் இஷ்ட பந்துக்களுடன் தேவதா அர்ச்சனைசெய்யப்பட்ட இடத்தில் இருந்து திக்குப்பாலகர்களை பூஜிக்கவும் பிறகு அந்த இடத்தைச் சுத்தப் படுத்தி புகிரோகிதர்களால் மந்திரங்களினாலே அந்தபூமியை பூஜித்து தர்ப்பங்களினாலேயும் அக்ஷதை வெண்கடுகு இவைகளை நாலுபக்கங்களிலும் வாரிஇறைக்கவேணும் (யதாஸ்தனைதான்) யஜாக்கிறதோ, தெய்வமுதவதி) என்கிற மந்திரத்தினால் ஆபாதந் செய்யவேண்டியது இந்தவிதமாய்த்தேவதைகளை பிரார்த்தித்துப் பரிசுத்தனாக ஒருபொழுது சாப்பிட்டுக்கொண்டு வலதுபாரிசமாய் பூமியில் படுத்துக்கொண்டு எப்படிஉபதேசமோ அப்படியே சுவப்பனத்தை பரிக்ஷிக்கவேண்டும். ஹே,சம்போமுக்கண்ணா ஹே ருத்திரா திருசூலபாணி, விருஷபவாகனா, ஹேநித்தியரே தூங்குகிறவனாயிருக்கிற உனக்கு சுவப்பனத்தில் எனக்கு இஷ்டபிறுப்திகளை சொல்லும் ஏகவஸ்திரனாகவும் தர்ப்பாசனத்தில் படுத்து இருக்கிறவனும் பரிசுத்த மனதுள்ளவனாகவும் தூங்குகிறபுருஷன் விடியற்காலமே சுபாசுபத்தைப் பார்க்கிறான்.

## வீடுகட்டவேண்டிய காலங்களில் தாமிருக்கிற திக்கிலிருந்து வீடுகட்டப்போகிற திக்கின்பலன்.

வீடுகட்டவேண்டியவர்கள் தாம் இருக்குமிடமிருந்து வேறு இடங்களில் கட்டவேண்டியிருந்தால் கிழக்கு, லக்ஷ்மி கடாக்ஷம் அக்கினி துக்கம், தெற்கு எமத்துவாரம், நிருதி மகாபயம், மேற்கில் கலகம் வாயு மிருத்திபுபயம், வடக்கு வம்ச விருத்தி, ஈசான்யம் நவரெத்தினலாபமுண்டாகும்.

## மனைமுகூர்த்தம் செய்யவேண்டிய மாஸம்.

சித்திரை வியாதி, வைகாசி தனப்ருப்தி, ஆனி மிருத்தியு பயம், ஆடி பசு, நாசம், ரெத்தினலாபம், ஆவணி ஜனவாத்து, புரட்டாசி மித்திரஹானி, ஐப்பசி சண்டை, கார்த்திகை தனதான்ய லாபம், மார்கழி மிருத்தியுபயம், தை அக்கினிபயம், மாசி ரெத்தின லாபம், பங்குனி மிருத்தியுபயம், ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி மாஸங்கள் வீடுகட்டக்கூடாது. மற்றஎட்டுமாஸங்கள் எடுக்கப்பட்டிருந்தாலும் வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி, இந்தநான்குமா

ஸங்களும் உத்தமம். ஆடி சித்திரை ஐப்பசி தை இந்நான்கு மாஸங்களும் மத்திமம். ஆனி புரட்டாசி மார்கழி பங்குனி மாஸங்கள் அதமம்

### மனை முகூர்த்தம் செய்யவேண்டிய வாரங்கள்:—

ஸோமவாரம், புதவாரம், குருவாரம், சுக்கிரவாரம், உத்தமம் சனி, ஞாயிறு, மத்திமம். செவ்வாய் அதமம்.

### திதி.

பூர்வ அஷ்டமி, சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி, அமாவாஸை பௌர்ணமி கூடாது. மற்றதிதிகள் உத்தமம்.

### நக்ஷத்திரம்.—

ரோகிணி, திருவோணம், அநுஷம், பூசம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ரேவதி, மிருகசீரிஷம், புனர்பூசம், அஸ்தம் உத்தமம் சித்திரை அவிட்டம் மூலம் சுவாதி சதயம் இவைகள் மத்திமம். மற்ற நக்ஷத்திரங்கள் அதமம்.

### ராசி.

ஸ்திரராசி ரிஷபம், சிங்கம் விருச்சிகம் கும்பம் உத்தமம் மிதுனம் கன்னி தனுசு மீனம் மத்திமம். மற்றவை அதமம்.

அடியிற்கண்டகாலங்களில் நல்லனவாகக் குறிப்பிட்டகாலத்தில் செய்யிற் புத்திர பௌத்திர விருத்தியை செய்யக்கூடிய காலமாயிருப்பதாலும் நியமித்த காலமானது தனக்கு அனுகூலமாய் பொருந்தியிருக்கிற காலத்தில் சுபதினத்தில் கிரகநிர்மாணம் செய்யலாம்.

### மாஸதோஷம் பார்க்காமல் கட்டக்கூடியவைகள்.

நாணல், கீத்து, பனைமட்டை, மூங்கில், பேய்க்கரும்பு, மூதலியவைகளால் கட்டப்பட்ட கட்டிடங்களுக்கு மாஸதோஷம் பார்க்க வேண்டியதில்லை. •கருங்கல், செங்கல், இவைகளால் கட்டப்படுகிற வீடுகளுக்கு அவசியம் மாஸதோஷம் பார்க்கவேண்டியது

நிந்தித்த மாஸங்களிலும் சாந்திராயன மாஸங்களிலும் கிரக நிர்மானம் செய்வது சுபமன்று. கோசரம் அஷ்டவர்க்கம், திசா புத்திமுதலியவைக்கவனித்துச் செய்யவேண்டியது. குரு, சுக்கிர சூரிய அங்காரகபெலத்தை கவனிக்கவேணும். சௌரமானத்தில் சந்திரபுதன் பலமிருக்கும்போது கிரகநிர்மாணம் செய்யவேணும் எல்லாவர்ணத்தாருக்கும் சூரியசந்திரபலம் அவசியம் பார்க்கவேண்டியது.

## கிரகங்கள் நிறைபலன்:--

சூரியன் ஓஜராசியில் இருந்தால் எஜமானன் பீடிக்கப்படுகிறான். சுக்கிரனிருந்தால் சமபந்துக்கள் நசிக்கும புதனால புத்திர பௌத்திரர்கள் பீடிக்கப்படுகிறார்கள். சந்திரனால பந்துக்கள பீடிக்கப்படுகிறார்கள். செவ்வாயால் சகோதரர்கள் பீடிக்கப்படுகிறார்கள். சனியினால் வேலைக்காரர்கள் பீடிக்கப்படுகிறார்கள் இந்த விஷயத்தில கொஞ்சமேனும் சமுசயப்படவேண்டியதில்லை.

சூரியன் பலமுள்ளவனாகவிருந்தால் கிரகம் பீடிக்கப்படுமென்றும் சொல்லப்படுகிறது எல்லாவருணத்தாருக்கும் சூரியசுத்தி விதிக்கப்படுகிறது தசானாதன் ஈனபலவானாக இருக்கும்போது வாணநாதன் அப்படியே இருக்கும்போதும் பீடிக்கப்பட்ட நட்சத்திரத்தில சூரியனிருக்கும்போதும் ஒன்றும் நினைக்கவேகூடாது.

சூரியன் நிற்கும் பலன் சூரியன் முகூர்த்தம் செய்யும் ராசியில் நின்றால் குஷ்டரோகம் உண்டாகும் 2-மிடத்தில் அர்த்தஹானி 3 ல் தனலாபம் 4-ல்பயம் 5-ல் புத்திரநாசம் 6-ல் சத்துருநாசம் 7-ல் ஸ்திரீநாசம் 8-ல் மரணம் 9-ல் தர்மநாசம் 10-ல் காரியானுகூலம் 11-ல் ஐசுவரியம் 12-ல் தனச்சேதம் இரண்டு, ஐந்து, ஏழு, ஒன்பதில் சூரியன் நின்றால் மத்திமம். மற்றபிடத்தில் சூரியன் நின்றால் அதெப்படியெனில் ஸமஸ்த அகஸ்தைக்கும் சூரியன் முதலான கிரகங்கள் விருத்தர்களானாலும் பாலர்களானாலும் வக்கிரம் அதிசாரமடைந்தாலும் சத்துருதிருஷ்டியடைந்தாலும் கொள்ளி முதலிய வைகளால் பீடிக்கப்பட்டாலும் கிரகாரம்பம் கிரகப்பிரவேசம் இதுகளில் பூர்வோத்கிரகதேவதைகளை பூஜிக்கவேண்டும் இல்லாவிட்டால் சௌக்கியம் உண்டாகாது.

கிரகயோகங்கள் முகூர்த்தஞ் செய்யப்பட்ட லெக்கினத்தில் குருவும் 6-ல்சூரியனும் 12-லாவது 4-லாவது புதனும் 3-ல்சனியும் இருந்தால் அந்த வீட்டிற்கு வயது நூறு.

லக்கினத்தில் சுக்கிரனும் 7ல்புதனும் 11-ல்சூரியனும் கேந்திரங்களில் குருவுமிருந்தால் வயது நூறு.

4 ல்குருவும் 7-ல்சந்திரனும் 11-ல்செவ்வாய் சூரியனுமிருந்தால் எண்பதுவயது.

லக்கினத்தில் சுக்கிரனும் 5-ல்குருவும் 6-ல்செவ்வாயும் 3-ல் சூரியனுமிருந்தால் வயது நூறு.

லக்கினத்தில் குரு சுக்கிரனும் 6-ல்செவ்வாயும் 11-ல்சூரியனுமிருந்தால் வயது இருநூறு.

லக்கினத்திலாவது விருஷபத்துலாவது மீனத்திலாவது சுக்கிரனிருந்து 4-லிலாவது கன்னிமீனகடகத்திலாவது குருவிருந்து மகர கும்பத்திலாவது சனியிருந்தால் அந்தப்பட்டிற்கு வயது ஆயிரம்

மிதுனகன்னியிலாவது ஸ்திரங்களிலாவது புதனிருந்தால் வயது இருநூறு.

கடகம் லக்கினமாக அதில் சந்திரனிருக்க கேந்திரங்களில் குருவும் ஸிம்மத்திலாவது மேஷவிருச்சிகத்திலாவது சூரியனுமிருந்தால் அந்தவீட்டில் வெகுகாலம் வரையில் லக்ஷ்மி வாஸமாயிருப்பாள்

லக்கினத்தில் சுக்கிரனும், 1, 7-ல் குரியனுமிருக்க கோபுரம் சலவீடு இவைகள் கட்ட வயது நூறு

லக்கினத்தில் சந்திரனும் 4-லபுதன் குரு அஸ்தமனமாக வயது அறுநூறு

லக்கினத்தில் 10ல்- சுக்கிரன் நிற்க 3-ல்புதன் நிற்கக் குருஅஸ்தமனமாக வயது அறுநூறு

குரு க்ஷேத்திரத்திலிருக்க வெள்ளிவீட்டில் புதனிருக்கமுகூர்த்தம் செய்தால வயது 800. இதே காலத்தில் சூரியஅஸ்தமன காலமாக சந்திரன் உதயமாக ஆலபமுகூர்த்தம் செய்தால் வயது ஆயிரம்.

லக்கினத்தில் சுக்கிரன் 7-ல்ராஜா விருக்க10-ல் சந்திரனிருக்க வயது ஆயிரம்

லக்கினத்தில் சுக்கிரனிருக்க முகூர்த்தம் செய்தால் அக்கினி பயமில்லை. குருக்ஷேத்திரத்திலிருக்க முகூர்த்தம் செய்தால் அக்கினிபயமில்லை.

கடகம் மகரம் மீனம் இவற்றில் சந்திரனிருக்க இவற்றில வைக்கோல போட்டால் ரொம்ப நல்லது

பூராடம் திருவோணம், ரோகணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி. ஆயில்யம், மிருகசீரிஷம், இவைகளில ராகுவிருக்க குருவாரத்தில் கிரகாரம்பம் செய்ய மகிழ்ச்சியுண்டாம.

ஜலராசியில் சுக்கிரனிருக்க சுக்கிரவாரமாகில் செல்வமுண்டு ஜலராசியில சந்திரனிருக்க தன்மனைவி வீட்டிற்கு விலக்காயிருந்தாலும் சீதகம் முதலியவைகளாயினும் மனைவிகெர்ப்பமாயிருக்கினும் இப்படிப்பட்ட காலங்களில் கிரகாரம்பத்திறகாக முகூர்த்தம் செய்யலாகாது.

## சூரியசார பலன்.

பரணியின் 2 பாதங்களும் கார்த்திகை 4 பாதம் ரோகணிமுதல் பாதம் இந்த ஏழுபாதங்களிலும் சூரியனிருக்க வீடுகட்டினால் அக்கினி பயமுண்டாம்.

## அங்காரசார பலன்.

கார்த்திகை, பூசம், மகம், பூரம், அஸ்தம், மூலம், ரேவதி, இந்த 7 நக்ஷத்திரத்திலும் செவ்வாயிருக்க வீடுகட்டினால் புத்திர ஹானி கன்னி, மிதுனம், தனுசு, நிர்ஜலராசி மீனம், கடகம். மகரம் சம்பூர்ண ஜலராசி. விருச்சிகம் துலாம் கால்பங்கு ஜலராசி. இதில் சம்பூர்ண ஜலராசியில் உதயமான நக்ஷத்திரத்தில் சந்திரன் குரு சுக்கிரன் பார்வையில் வீடுகட்ட எத்தனம செய்யில் அங்காரக தோஷம் பார்க்கவேண்டியதில்லை.

## புதசாரம்

அசுவதி மிருகசீரிஷம் அஸ்தம் சித்திரை ரோகணி உத்திரம் இந்த ஆறுநக்ஷத்திரத்திலும் புதனிருந்தாலும் அல்லது லக்கினத்திலாவது உச்சத்திலாவது புதனிருந்தாலும் வீடுகட்ட ஆரம்பம்செய்தால் புத்திரசம்பத்துடனே சுகமாயிருப்பார்கள்.

## குருசார பலன்:—

திருவோணம், உத்திராடம், உத்திரட்டாதி. பூராடம், மிருகசீரிஷம், ஆயில்யம், ரோகணி, பூசம், இந்த ஒன்பது நக்ஷத்திரங்களிலும் குருவிருந்தாலும் லக்கினத்திலாவது உச்சத்திலாவது குருஇருக்க வீடுகட்ட ஆரம்பம் செய்தால் சகலசம்பத்தும் உண்டாம்.

## சுக்கிரசாரம்

கேட்டை, புனர்பூசம், சித்திரை, அசுவதி, பூராடம், அவிட்டம், அனுஷம், விசாகம். திருவாதிரை. சதயம், இந்த 10 நக்ஷத்திரத்திலும் சுக்கிரனிருக்க வீடுகட்டினால் சகலசம்பத்துக்களும் உண்டாம்.

## சனிசாரம்

சதயம், பூரட்டாதி, சுவாதி, உத்திரட்டாதி பரணி, அவிட்டம் அனுஷம், கேட்டை, இந்த எட்டு நக்ஷத்திரத்திலும் சனியிருக்க வீடுகட்ட ஆரம்பித்தால் பக்ஷிகள், ராக்ஷஸாள் பைசாசங்கள் இதுகள் வந்து அடையும்.

## ராகுசாரம்.

ராகுவிருந்த நக்ஷத்திரத்திற்கு மூன்றும் நக்ஷத்திரம் 14 நக்ஷத்திரமும மிருத்யுசாரமானபடியால் அந்த நக்ஷத்திரங்கள் கூடாது.

## அவயோகம்

1 குருசுக்கிரன் அஸ்தமனம் நீசம், பகை, சத்துரு, க்ஷேத்திரம் அடைந்தாலும், சத்துருவுடன் கூடினாலும், அந்தகாலத்தில் வீடுகட்டக்கூடாது. வீடுகட்டுகிற கர்த்தாஎந்தஜாதியானாலும், அந்த ஜாதிக்கிரகம் சத்துருவுடன் கூடினாலும, அஸ்தமனமானாலும், நீசஸ்தானத்திலிருந்தாலும், அந்தகாலத்தில் கட்டினால அந்த வீட்டை பிறர் அனுபவிப்பார்கள்.

2 ஆரமபலக்கினத்திற்கு சத்துருக்ஷேத்திரக்கிரகம் சத்துருக்ஷேத்திரத்திலிருந்தாலும், 10-மிடத்திலிருந்தாலும், அப்படிப்பட்ட சமயத்தில் கட்டப்பட்டவீடு பராதீனமாய்ப் போய்விடும.

3 வீடுகட்டுகிற லக்கினத்தின் 10-ம் அதிபதியும், 7ம்அதிபதி, லக்கினாதிபதி, இம்மூவரும் பலகீனமாயிருந்தால் அந்தவீட்டை பிறர் அனுபவிப்பார்கள்.

4 லக்கினத்தில் பாபிகள் இருந்து சுபன் பார்வையில்லாவிட்டால் அந்த வீட்டை பிறர் அனுபவிப்பார்கள்.

5. லக்கினத்தில் க்ஷீணசந்திரனும் 8-ல்செவ்வாயுமிருந்தால் சீக்கிரம கெட்டுப்போம்.

6. முகூர்த்தலக்கினமுதல் 12-ராசிகளிலும் கிரகங்கள் நின்றபலன். லக்கினத்தில்சூரியனிருந்தால், இடிவிழும். சந்திரனிருந்தால், திரவியநஷ்டம். செவ்வாயிருந்தால், மிருத்யுபயம். புதனிருந்தால் சுகக்குறைவு. குருவிருந்தால் சகலசம்பத்துமுண்டாம். சுக்கிரனிருந்தால் புத்திர உற்பத்தி, சனியிருந்தால் தரித்திரம்.

7. இரண்டில் சூரியனிருநதால் தனஹானி. சந்திரனிருந்தால் திரவியநஷ்டம், செவ்வாயிருந்தால் விலஙகுவரும் புதனிருந்தால் திரவியமுண்டாகும். குருவிருந்தால தர்மம் விர்த்திபரிபாலனமுண்டாகும். சுக்கிரனிருந்தால் சௌக்கியமாயிருப்பார்கள். சனியிருந்தால் பலவிதநன்மைகளுண்டாகும்

8. மூன்றுமிடத்தில் பாபிகளிருந்தாலும் சுபர்கள் இருந்தாலும் நல்லது.

9. நான்காமிடத்தில் சூரியனிருந்தால், பயமுண்டாம். சந்திரனிருந்தால், சௌக்கியமுண்டாம். புதனிருந்தால் திரவியலாபம். குரு

யிருந்தால் ராஜாவினால் பூஜிக்கப்படுவான். சுக்கிரனிருந்தால் பூமி லாபமுமுண்டாகும். சனி செவ்வாயிருந்தால், எல்லாம் நாசத்தையடையும்.

10. ஐந்தில் சூரியனிருந்தால், புத்திரநாசம். சந்திரனிருந்தால் கலகம் செவ்வாயிருந்தால் காரியவிரோதம். புதனிருந்தால் மிருகலாபமுண்டாகும். குருவிருந்தால் திரவிய முதலியசம்பத்துண்டாகும். சுக்கிரனிருந்தால் புத்திரசம்பத்துண்டாகும். சனியிருந்தால் பந்துக்களால் கலகமாம்

11. ஆறாமிடத்தில் சூரியனிருந்தால் ரோகமிருது. சந்திரனிருந்தால் சுகமுண்டாகும். செவ்வாயிருந்தால் புதையல் அகப்படும். புதனிருந்தால் திரவியபிராப்து. குருவிருந்தால் மந்திரம், வித்தை, இவைகள் பலிக்கும். சுக்கிரனிருந்தால் கிலேசமுண்டாகும். சனியிருந்தால் சத்துருவில்லை.

12. ஏழாமிடத்தில் சூரியனிருந்தால் கீர்த்திக்குறைவு சந்திரனிருந்தால் கிலேசம், செவ்வாயிருந்தால் விபத்து, புதனிருந்தால் குதிரைகள் முதலிய வாகனங்கள் கிடைக்கும், குருவிருந்தால்யானை கிடைக்கும், சுக்கிரனிருந்தால் பூமி கிடைக்கும், சனியிருந்தால் வியாதி உண்டாகும்.

13. எட்டாமிடம் சூரியனிருந்தால் சத்துருக்கள் நாசத்தை யடைவார்கள், சந்திரனிருந்தால் ஸர்வம் நாசமடையும், செவ்வாயிருந்தால் கலகம், புதனிருந்தால் மரியாதை தனமிவைகள் கிடைக்கும். குருவிருந்தால் ஜயம் கிடைக்கும். சுக்கிரனிருந்தால் கலகமுண்டாகும். சனியிருந்தால் வியாதி.

14. ஒன்பதாமிடத்தில் சூரியனிருந்தால் தர்மக்குறையுண்டாகும். சந்திரனிருந்தால் வியாதி யுண்டாகும். செவ்வாயிருந்தால பணக்குறைவு உண்டாகும். புதனிருந்தால் பலவித சந்தோஷமுண்டாகும், குருவிருந்தால் வித்வத்தர்மம் கீர்த்திமுதலியதுண்டாகும். சுக்கிரனிருந்தால் ஜயமுண்டாகும். சனியிருந்தால் தருமஹீனதை உண்டாகும்.

15 பத்தாமிடத்தில் சூரியனிருந்தால், கிரேகவிருத்தியுண்டாகும், சந்திரனிருந்தால் துக்கமதிகமுண்டாகும், செவ்வாயிருந்தால்ரத்தினலாபங்கிடைக்கும், புதனிருந்தால் ஸ்திரீகள் மூலமாய்தனங்கி

டைக்கும், குருவிருந்தால் படுக்கை ஆஸனம் முதலியவைகள் உண்டாகும், சனியிருந்தால் கீர்த்திநாசம்.

16 பதினோறாமிடத்தில் சுபாளிருந்தாலும் பாபிகளிருந்தாலும் அவர்கள் மூலமாய் லாபங்கிடைக்கும்.

17 பனிரெண்டாமிடத்தில் சுபாளிருந்தாலும் பாபிகளிருந்தாலும் அவர்கள்மூலமாய் நஷ்டம் நேரிடும்.

(குறிப்பு) உச்சம் கேந்திரம் முழுப்பலன், ஆக்ஷி முக்கால் பங்கு பலன், கோணம் அரைப்பங்குபலன், மித்துருக்ஷேத்திரங்கால் பங்கு பலன்.

மனைமுகூர்த்தம் செய்தபிறகுஅட்டவணையில் குறிப்பிட்டிருக்கிற பிரகாரம் மனையிருக்கும் அகலம் நீளத்திற்குத் தகுந்தபடியும்எஜமானனுடையவும் அவர் பத்னிபுத்திரன் முதலியவர்களுக்கும்பொருந்தமுள்ள மனையாயும் திசை யோனி பகையில்லாததாயும்பார்த்துக்கணக்கு செய்து மனைபோடவேண்டும். பிறகு முளையடித்து அஸ்திவாரமுகூர்த்தம் செய்தல் வேண்டும்.

(N. B.) மனைப்பொருத்தம் அட்டவணையில்காண்க.

சுபமஸ்து.

## வாசல்படி இலக்ஷணம்.

உத்தமமான துவாரலெட்சணத்தையும் வாசல்படி வைக்கவேண்டிய விதத்தையும் பதினைந்து விதமாய்ச்சொல்லப்பட்டிருக்கிறது.

மும்மூன்று மாசமாய்ப் பகுத்துக் கொண்டு வாஸ்துபுருஷன் எந்த முகமாய்ப் படுத்து இருக்கிறானோ அந்தமுகமாய் வைக்கவேண்டும் அப்படியில்லாமல் வேறுவிதமாய் வாசல்படி வைத்தால் துக்கசோகத்தை உண்டாக்கும். ஆகையால், வேறுமுகம் கூடாது.

விலக்கப்பட்ட மூன்று மாஸங்களிலும் சூரியனிருக்கும் போது கிழ்பக்கத்தில் துவாரம் வைக்கக்கூடாது. அவசியமானால் மற்ற மூன்று பக்கத்திலும் வைக்கலாம்.

கடகம், கும்பம், இதில் சூரியனிருக்கும்போது கடகத்தில் கிழக்கும் கும்பத்தில் மேற்கும் வைக்கலாம். மேஷமாஸத்தில்வடக்கு முகம் கார்த்திகை மாசத்தில் தெற்கு முகமாயும் வாசல்வைக்க

லாம். அப்படியில்லாமல் இந்த மாஸத்தில் வேறுமுகமாய்வாசல்வைத்தால் கர்த்தாவுக்கு சோகம், பயம், வியாதி, இவைகள் உண்டாகும்.

ஆவணி மாஸத்தில் மேற்குமுகம் ஐப்பசிமாஸத்தில் வடக்கு முகம். ஆடிமாஸத்தில் கிழக்குமுகம் வைக்கலாம் மேற்குமுகம் வைக்கக்கூடாது.

ஐப்பசி மாஸத்தில் விருச்சிக அம்சத்தில் சூரியனிருக்கும்போது மேற்கு முகம் வாசல் வைக்கக்கூடாது.

தை மாசி மாஸத்தில் வடக்கு முகமாய் வாசல்படி வைக்கக்கூடாது.

கடகமாஸம் சிம்மமாஸத்தில் சூரியனிருக்கும்போது தெற்கு முகமாய் வாசல் வைக்ககூடாது.

தை மாசி மாஸத்தில வடக்குமுகமாய் வாசல் வைக்கக்கூடாது.

ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி, இந்த நான்கு மாதங்களிலும் மனைமுகூர்த்தம் நிலை வைத்தல் தூண் வைத்தல் முதலியது கூடாது.

ஆவணி மாசி மாஸத்திலும் வாசல்படி சம்பந்தமாய் மரங்கள் வெட்டக்கூடாது. அப்படி முறட்டுத்தனமாய் வெட்டிக்கட்டினால் அப்படிக்கட்டப்பட்ட வீடு அக்கினியினால் பாதிக்கப்படும்

பௌர்ணமி முதல் அஷ்டமிவரையில் கிழக்கு முகம் நவமிமுதல் சதுர்த்தசி வரையில் வடக்குமுகமான வாசல் வைக்கக்கூடாது. பிராமணர்களுக்கு வடக்கு முகமும் க்ஷத்திரியர்களுக்கு மேற்கு முகமும் வைசியர்களுக்கு கிழக்கு முகமும் சூத்திரர்களுக்கு தெற்கு முகமான வாசலும் வைப்பது உத்தமம்

கடகம், விருச்சிகம், மீனம், பிராமணர்களுக்கும். மேஷம், சிம்மம், தனுசு, க்ஷத்திரியர்களுக்கும். விருஷபம் கன்னியாமகரம் வைசியருக்கும. மிதுனதுலாகும்பம் சூத்திரர்களுக்கும் ஏற்பட்டது.

கர்த்தாவுக்கு எந்த ராசி பொருத்தமோ அந்தமுகமாய் வாசல் வைப்பது சிரேஷ்டம் அப்படியில்லாமல் வித்தியாசமாய் வைத்தால் விபரீத பலனைத்தரும்.

தனுசு, மேஷம், சிம்மம், இந்த ராசிகளில் சந்திரனிருக்கும் போது கிழக்குமுகமாயும் விருஷபகன்னியாமகரம் இந்த மூன்றுராசிகளிலும் சந்திரனிருக்கும்போது தெற்கு முகமாயும் மிதுனதுலாம் கும்பம் இந்த மூன்றுராசிகளிலும் சந்திரனிருக்கும் போது மேற்குமுகமாயும் கடகவிருச்சிகமீனம் இந்த மூன்றுராசிகளிலும் சந்திரனிருக்கும்போது வடக்கு முகமாயும் துவாரம் வைக்கவிசேஷம்

கார்த்திகை முதல் 7 நக்ஷத்திரம் கிழக்கிலும், மகம் முதல் 7 நக்ஷத்திரம் தெற்கிலும், அனுஷம் முதல் 6 நக்ஷத்திரம் மேற்கிலும், அவிட்டம் முதல் 7 நக்ஷத்திரம் கிழக்கிலும், வாசல் வைக்கவும் சந்திரன் எந்த திக்கை அடைந்திருக்கிறனோ அந்த முகமாய் வாசல் வைக்கவும் சந்திரனுக்கு பின் பக்கம் பாரசுவம் கூடாது.

வக்கிரகமாக சொல்லப்பட்ட திக்குகளில் பிராமணர் முதலாக வைக்கவும்.

ஆவணி-மீ வடக்குமுகம் கூடாது. வைகாசிமாஸத்தில் மேற்குமுகம் தெற்குமுகம் கூடாது. விசேஷமாய் மூலைகள்பார்க்க நிலை வைக்கக்கூடாது.

மார்கழி-மீ முதல் மும்மூன்று மாஸமாக பிரித்துக்கொள்ளவும். முன் சொன்ன கிரமமாக செய்யாத பக்ஷத்தில் அக்கினிபயம் கலகமுமுண்டாகும்.

தென்மேற்கு, வடக்கு, வடமேற்கு, தெற்கு, அக்கினி, இந்த திக்குகளில் ஞாயிற்றுக்கிழமையிலும்நிலைவைத்தல்கூடாது. ஞாயிற்றுக்கிழமையில் கிழக்குமுகமாய் கட்டாயம்கூடாது. கிரகாரம்பம் கிரகப்பிரவேசம் இதுகளும், ஞாயிற்றுக்கிழமையில் கூடாது.

திருவம் பார்த்து கிரகங்கள் ஏற்படுத்த வேண்டியது. பலதுவாரம் தாய்ச்சுவரில் கூடாது.

கிழக்கு முகமான வாசல் தானியலாபத்தைக் கொடுக்கும். தெற்குமுகம் ஜயத்தைக் கொடுக்கும். மேற்கு சுகத்தைக்கொடுக்கும் வடக்குமுகம் சுகசம்பத்துகளைக்கொடுக்கும் தென்கிழக்கு தென்மேற்கு வடக்குமுகம் வாயுமூலையாயும் ஈசான்யமுகமாயும் பார்வையுள்ளதாக துவாரம் வைக்கக்கூடாது. ஆனால், ஈசான்னியம் கன்னி ஒரு அங்குல் சுற்றுவைக்கவேண்டியது. ஆனால், திக்குகளையாவது திசைகளையாவது அதிக நேர்பார்வையாய் வைக்கக்கூடாது. கட்டாயம் அக்கினிவாயுகூடவேகூடாது.

நேர்வடக்கு முகம் கூடாது. அப்படியேற்பட்டால் ஆலயமாயின் ரொம்பகடுமையாக விருக்கும் வீடு ஆனல் ரொம்பகஷ்டம் உண்டாகும். ஈசான்னியம் கடுமை தெற்கு விபத்து வடக்குவாயு இதற்கு மத்தி இரண்டும் கூடாது.

வைப்பது விபரீதமாகும் அதன் பலன் விருத்திரதம். கிழ்ப்பக்க மில்லாமல் மற்றமூன்று பக்கமும் வாசலிருப்பது நியாகப்பாதகம் என்னப்படும். அதனால் பசுக்கள் முதலிய மிருகங்களையும் திருட்டு பயமும் உண்டாகும்.

தெற்குமுகம் வாசலில்லாமல் மற்ற மூன்று பக்கமும் இருந்தால் பாக்கியவிரதம் இதன்பலன் பயம்.

மேற்குமுகமில்லாமல் மற்ற மூன்று பக்கங்களிலும் இருப்பது ஸ்ரீநிலயம் என்னப்படும் இதன்பலன் உத்தமபலனாக நடக்கும்.

வடக்குமுகம் இல்லாமல் மற்றப்பக்கங்களில் இருப்பது கமலாகரமென்னப்படும். இதன்பலன் உத்தமம்.

## தெருநிலை வைக்க:—

மனையின் அகலத்தை ஒன்பது பங்காகச்செய்து 1-வது சூரியன 2-வது சந்திரன் 3-வது செவ்வாய் 4-வது புதன் 5 வது குரு 6-வது சுக்கிரன் 7 வது சனி 8-வது ராகு 9-வது கேது என்று சொல்லப்படும் இதில் சந்திரன் புதன் பாகத்தில் வைப்பது உத்தமம் மற்றபாகம் வீடுகளுக்குக் கூடாது. சூரியவாஸ்து வீதிக்குக் கிழக்கு முதலாகவும் சந்திரவாஸ்து வீதிக்கு தெற்கு முதலாகவும் அரண்மனைகளும் தேவாலயம் ராஜக்கிரகம் சத்திரமுதலியவைகளுக்கு குருவின் பாகத்தில் வைத்தால் உத்தமம். மாட்டுக்கொட்டிலுக்கு சுக்கிரன் பாகத்தில் வைக்கவும்.

## ஒன்பது பாகத்திலும் வாசல் விடும்பலன்.

சூரியன் பாகமாகில் தனக்குறைவு கலகம் முதலியவைகளுண்டாகும்.

சந்திரன் பாகமாகில் ஸௌக்யஸம்பத்துக்கள் உண்டாகும்.

செவ்வாயின் பாகமாகில் வியாஜ்ஜியம் கடன் முதலியவைகள் உண்டாவதுடன் ஒருவரிடமும் நிலைத்து நிற்காது.

புதன் குரு இவ்விரண்டு பாகமும் மாறாத செல்வமுண்டாகும் ஆனால், மனைமையம் கூடாது கொஞ்சம் விலகியிருக்க வேண்டும்.

சுக்கிரன் பாகமாகில் அற்பபலன் பொருள் சிலவு வியாச்சியமு தலியதுண்டாகும். 7, 8, 9, சனியின் பாகமாகிலும் ராகு கேதுக்க ளின் பாகமாகிலும் ஒருகையிலும் நிலேத்து நிற்கமாட்டாது. அது வுமன்றி கடன் சந்ததிகஷ்டம் முதலியதுண்டாகும் பலவித துன்ப முண்டாகும்.

சந்திரன் புதன் குருபாகம் உத்தமம். இடமில்லாவிடில் மற்ற பாகத்துடனும் கலந்து வரலாம். ஆனல், பூர்ணபலனுக நடக்கமா ட்டாது.

தெற்குமுகம் மேற்குமுகம் கட்டின வீட்டிற்கு கமலாகரமென் னப்படும். இதன்பலன் லெக்ஷ்மீகரம். மேற்குமுகம் வடக்குமுகம் கட்டின வீட்டிற்கு சுவர்ணபல மென்னப்படும். இதன் பலன் சோரபயம் பீடை உண்டாகும். வடக்கு கிழக்கு கட்டின வீட்டிற்கு புஷ்கத முஷ்டிகம் என்னபபடும். இதன்பலன்......சோரபயம் இவைகள் உண்டாகும். தெற்கு மேற்கு வடக்கு கட்டின வீட்டிற் கு புத்திரமுஷ்டிகமென்னப்படும் இதன் பலன் பயம். கிழக்கு தெ ற்கு வடக்கு கட்டின வீட்டிற்கு மேற்கில் வாசல் கால் வைத்தால் அதிசயமென்னப்படும் இதன்பலன் ஹானி. கிழக்கு மேற்கு தெ ற்கு வடக்கு கட்டின வீட்டிற்கு வடக்கில் வாசல் கால் வைத்தால் நல்ல சுகமுண்டாகும். மேற்கு கிழக்கு வடக்கு இந்த மூன்றுபக்க த்திலும் கட்டின வீட்டிற்கு மூன்றுபக்கத்திலும் வாசல்கால் வைத் தால் கல்யாணபிரதம் என்னப்படும் இதன்பலன் சுபம். நான்கு பக் கத்திலும் வாசல்கால் வைத்து கட்டியவீட்டிற்கு சதுர்சாலை என்ன ப்படும். இதன்பலன் உத்தமம். இது ராஜாக்களுக்கும் தேவதை களுககுமாம்.

## தூண் வைக்க:—

அதோமுக நக்ஷத்திரத்தில் கழிகள் முதலியது வெட்டலாம். திரியங்கமுக நக்ஷத்திரத்தில் ஸ்தம்பம்துவாரமுதலியது வைக்கலாம்.

உப்பரிகை மேல்படி வீடு இவைகளுக்கு முதலில் தூண் ஆக்கி னேயத்தில் வைக்கவேணும். முதல்ஜாமம் உத்தமம், 2-வது ஜாமம் ஐயம், மற்ற இரண்டுஜாமமும் ராக்காலங்களும் கூடாது.

ஸ்தம்பம் வைத்தவுடனே எஜமானன் ஆகாயத்தைப் பார்க்கக் கூடாது. பார்த்தால் காக்கை கழுகு முதலிய அபசகுனங்கள் கண்டால் கர்த்தாவுக்கு சுபத்தைக் கொடுக்காது.

அப்படி வைக்கப்பட்ட ஸ்தம்பத்தின் பேரில் காகம் கழுகு முதலிய பக்ஷிகள் உட்காரக்கூடாது. அப்படி உட்காராமல் குடையை வைத்துக் கட்டவேண்டும்.

ஸ்தம்பத்தின் அடியில் ரத்தினங்கள் போடவேணும். திக்கு ஸ்தானங்களில் மற்ற ஸ்தம்பங்களை வைக்கவேணும். மண்டபம் வீடு உப்பரிகை தூண் வாசல்கால் இவைகள் வைக்கும்போது அவசியம் வாஸ்துபுருஷனை பூஜிக்கவேணும்.

கிரகமத்தியில் வாசல் தூண் வைக்கக்கூடாது. கருங்கல்லினால் வீட்டிற்கு நிலைவைக்கக்கூடாது. ஒருஜாதி மரத்தினால் வாசல் நிலை செய்யவேண்டும்

குருவிருக்கும் லெக்கினத்தில் ஸ்தம்பம் நாட்டி புதனின்ற லெக்கினத்தில் உத்திரம் போட்டு சுக்கிரன்நின்ற லெக்கினத்தில் ஓடுமாத்தினால் அந்தவீட்டிற்கு அக்கினிபயம், சோரபயம், ராஜபயமில்லை.

ஜலராசியும் சந்திரனுக்கு 5, 9-ல் சுக்கிரனும் நிற்க சுக்கிரவாரமாகில் இந்த தினத்தில் வீடுகட்டினால் சகலசம்பத்தும் உண்டாகும்.

ரிஷபம் கடகம் கன்னி கும்பம் துலாம் இந்த சங்கிராந்திகளில் சூரியனிருக்க, உத்திரம், அஸ்தம், சித்திரை, இந்தமூன்று நக்ஷத்திரத்திலும், சந்திரனிருக்க, அக்கினி மூலையில் ஸ்தம்பபிரதிஷ்டை செய்யலாம். கும்பம், மீனம, மேஷம், இந்த மூன்று ராசிகளிலும், சமபக்ஷமாறிலும், ரோகணி, மிருகசீரிஷம், புனர்வசு, இந்த மூன்று நக்ஷத்திரத்திலும் சந்திரனிருக்க, நிருதி மூலையில் ஸ்தம்பபிரதிஷ்டை செய்யவேண்டியது.

## சுவர்களின் உயர்வு லெக்ஷணம்:—

ஒருமுழ அகலப்பிரமாணத்திற்கு இரண்டுமுழம் உயரம் வைத்தல் வேண்டும். அதற்கு ஒருபடை என்று பெயர்.

10-சாண் உயரம் பிராமணர்களுக்கும் 16-சாண் க்ஷத்திரியருக்கும் 9-சாண் வைசியருக்கும் 8-சாண் உயரம் சூத்திருக்காம் இவை

களுக்குக் குறைவாயிருக்கக் கூடாது. சுவர் வைக்கும்போது விழுந்தால் சோரபயம் வெளிப்பக்கம் விழுந்தால் கலகம் உள்பக்கம் விழுந்தால் எஜமானனுக்காகாது.

(குறிப்பு) 9-அடி உயரம் $1\frac{1}{2}$ அடி அகலத்துக்குக் குறையக்கூடாது.

மரமிசைத்தல் தூண்வைத்தல் வாசல்நிலைவைத்தல் இவைகளில் மரத்தின் அடி கீழும் நுனிமேலுமிருக்கவேண்டும்.

உத்திரம் விட்டம் இவைகளுக்கு அடி மேற்கு தெற்கு இந்த திக்குகளிலும் நுனிப்புரம் வடக்கு கிழக்கு இந்த திக்குகளைப் பார்க்கவைக்கவேண்டியது. மற்றபடி மாறிவைத்தல் தீது.

## ஒருமனையை அறுபத்துநான்குபாகம்செய்து வீடு கட்டும் விதம்.

ஒருமனையை 64-பாகம் செய்து மத்தியில் 16 பாகம் நீக்கி பாக்கி சுற்றிலுமிருக்கிற 48 பாகத்தில் செய்யவும். இதையறிந்து வீடுகட்டவேண்டியது.

ஆலயம் வீடு முதலியவை கட்டவேண்டியதற்கு முந்தி வாஸ்து பதம் வாஸ்துவின்னியாஸம் வாஸ்துபூஜை வாஸ்துபலி வாஸ்துசாந்தி விதிப்படி செய்து பிறகுதான் வேலை ஆரம்பிக்கவேண்டியது.

### தாய்ச்சுவர் லக்ஷணம்:—

மனைக்குத் தாய்ச்சுவர் சேர்ந்தே கணக்கிட வேண்டும். தனி மனைக்கு நான்கு சுவரும் சேர்த்துக்கணக்கிடவேண்டும். சேர்ந்த வீடாயிருந்தால் மூன்றுசுவர் சேர்த்துக்கணக்கிடவேண்டும். தெருத்திண்ணையும் கொல்லைப்புரம் இறக்கப்படும் தாழ்வாரமும் கணக்கில சேரமாட்டாது.

### வாசற்படிசெய்ய மரங்கள்:—

தேக்கு, வேங்கை, பூவரசு, சிலாக்கியம் மற்றமரங்கள் கூடாது.

வாசற்படி உயரத்தை ஒன்பது கூறுசெய்து 5-கூறு அகலம் வைப்பது சிலாக்கியம்.

வாசற்படிக்கு ஒரேஜாதி மரம் உத்தமம். சூரியப்பலகை பக்கவாடம் இவைகளுக்கும் ஒரேஜாதி மரமாய்த் தானிருக்கவேண்டும். கதவுகளுக்கு ஒத்தைபபடையான பலகைகள் சேர்க்கவேண்டும்.

இரட்டைப்படையான பலகைகள் சேர்க்கக்கூடாது. வீட்டின் தலைவாசலுக்கடுத்த வாசல் உயர்ந்திருக்கவேண்டும். அப்படியிருக்காவிட்டால் வரப்பட்டபொருள் நில்லாது.

வீட்டிலிருக்கவேண்டிய அங்கணவிதி 1, 5, 9, உத்தமம். 2, 4, 6, 8, 10, 12, 16, இவ்விதமாயிருப்பது அதமம். வீட்டின் மேல் மோடு நான்குபக்கமும் சமமாயிருப்பது உத்தமம்.

வீட்டினுள் அரைகள் நடையிவைகளும் சேர்த்து 5, 7, 9, 11, இப்படி இருக்கவேண்டியது. 1, 2, 3, 4, 6, 8, 10, 12, இவைகள் இருக்கக்கூடாது.

வீட்டின் நடுவில் இருக்கப்பட்ட முற்றத்தை இரண்டு அளவுகளையும் அளந்து குழியாக்கி அச்சங்கியை 8-ல்கழிக்க 1, 2மீதிப்படில் நன்மை மற்றவை அதமம்.

வீட்டிற்குள் உத்திரங்கள் ஒத்தைப்படையாயிருக்கக்கூடாது. அப்படியிருந்தால் மனக்கலக்கம் உண்டாகும். கூடங்கள் எதிர் எதிராயிருக்கக்கூடாது. அப்படியிருந்தால் பலவிததுன்பங்கள் உண்டாம்.

## இத்தனைக்கட்டுகள் கட்டலாம்.

பிராமணர்களுக்கு நான்குகட்டு, க்ஷத்திரியர்களுக்கு மூன்று, வைசியர்களுக்கு இரண்டு, சூத்திரர்களுக்கு ஒன்று கட்டுவது உத்தமம். எல்லாஜாதியார்களுக்கும் ஒரேகட்டாயிருப்பது உத்தமம்.

எத்தனை கட்டுகள் கட்டப்பட்டாலும் அதற்கு ஆயாதிபொருத்தங்கள் வேறாகத்தான் ஏற்படும்.

## மாட்டுக்கொட்டில் மெத்தைப்படி ஜலதாரை இவைகள் அமைக்கவேண்டிய விதி.

மாட்டுக்கொட்டில் வீட்டில் சம்பந்தப்படக்கூடாது. வடக்கு கிழக்கு இத்திசைகளில் கட்டலாம். மெத்தைப்படி வடக்கு கிழக்கு இவைகளை நோக்கி ஏறும்படி கட்டவேணும்.

ஜலதாரை வடக்கு கிழக்கு ஈசான்னியம் இத்திசை நோக்கிப் போம்படி கட்டவேண்டும். மேற்கு நிருதி மத்திமம் வாயு தெற்கு அக்கினி இந்தப்பக்கம் அதமம் கூடாது.

வீட்டிற்குள்ளிருக்கிற எட்டுதிக்குகளிலும் செய்யவேண்டிய விஷயங்கள். கிழக்கில் தானியம் வைத்தல் சயனித்தல் பூஜைசெய்தல் இவைகள் உத்தமம். தென்கிழக்கில் சமையல்செய்ய போஜனம்செய்ய உத்தமம். மற்றக்காரியங்கள் கூடாது ஸ்திரீ புருஷர்கள் அவ்விடத்தில் சயனித்து கர்ப்பம் தரித்தால் அதினால் உண்டாகும சிசுவானது திருட்டு முதலிய துர்ச்செய்கைகளைச் செய்யும். தெற்கு திக்கில் பூஜைசெய்யவும் போஜனம் செய்யவும் உத்தமம் மற்றவைகள் கூடாது. அவ்விடத்தில் உண்டாகும் குழந்தைகள் முடம், செவிடு ஊமை குருடு முதலிய அங்கஹீனர்களாய்ப் பிறக்கும். நிருதிவீட்டில் உள்ள பாத்திரங்களை வைக்கவும் ஆயுதங்கள் வைப்பதற்கும் படிக்கவும் புஸ்தகங்கள் வைப்பதற்கும் உதவும் வேறு காரியங்கள் கூடாது

மேற்கு பூஜை செய்யவும் ஸ்திரீ புருஷர்கள் சயனிப்பதற்கும் உபயோகம், அவ்விடத்தில் உற்பவிக்கும் குழந்தைகள் புருஷனாயின் ஞானியாயும் பரிசுத்தனாயுமிருப்பான், பெண்ணாயின் பதிவிரதையாயிருப்பாள்

வாயுதிக்கானது பூஜைசெய்யவும் நெல் முதலிய தானியங்கள் வைக்கவும், ஸ்திரீகள் பிரஸவிப்பதற்கும், உத்தமம். அந்தயிடத்தில் ஸ்திரீ புருஷர்கள் சயனித்தல் கூடாது. அப்படி சயனித்துஉண்டாகும் பிள்ளைகள் தரித்திரத்தை யடையும்

வடக்குதிக்கு தனம் வைக்கவும் சயனிக்கவும் உதவும.

ஈசான்னியம் பூஜைசெய்யவும் நெல் முதலிய தான்யம் வைக்கவும் சயனிப்பதற்கும் உத்தமம். வீட்டின் வெளிபக்கத்திலிருக்கவேண்டியவிதம் கிழக்கில், சமையல்கட்டு, அக்கினி திக்கில் பசுத்தொழுவும், தெற்கில்குப்பைத்தொட்டி தென்மேற்கு தோட்டம், மேற்கில் எருமைத்தொழுவம்,வடமேற்கில்நெற்களஞ்சியம், வடக்கு போஜனசாலை, வடகிழக்கு கிணறு, அமையும்படி கட்டுவது உத்தமம்.

## 5-அத்தியாயம்.

## மரங்கள்வெட்டவேண்டிய விதிகளைச்சொல்லுகிறேன்

1. தேவதாருசந்தனம், வன்னி, இலுப்பை, தேக்கு, பூவாசு இவைகள் பிராமணர்களுக்கு சிலாக்கியம்.

2. கருங்காலி, வில்வம், மருதமரம், சிம்சுவா, விருக்ஷம், ஆச்சா, தேக்கு, இதுகள் க்ஷத்திரியர்களுக்காம்.

3. கருங்காலி, சிந்து, சந்தனம், திந்துகம், அர்ச்சுனவிருக்ஷம், வைசிரா, மாமரம், வைசியர்களுக்காம்.

4. மாமரம், முள்ளுள்ளமரங்களும், மற்ற பாலுள்ளமரங்களும், சூத்திரர் களுக்காம்.

5. மரங்கள்வெட்ட சூரியன் உபயராசியிலிருக்கும்போது மாசி, புரட்டாசி, மாஸங்களும், கிரகநிர்மாணஞ் செய்ய மரங்கள் வெட்டலாம். மற்ற காரியங்களுக்கு இந்த நாள் கூடாது.

6. சூரியனிருக்கும் நக்ஷத்ராதித்திற்கு 2, 4, 3, 8, 9-லும் சந்திரனிருக்கிற நக்ஷத்திரத்திலும் மரங்கள் வெட்டலாம். இந்தக்காலத்தில் நான்குவருணத்தாருக்கும் விருக்ஷங்கள் வெட்டசிலாக்கியம்

7. கட்டடத்தின் விஸ்தாரங்களில் ஒருஜாதி மரமானல் உத்தமம். இரண்டுஜாதி மரமானல் மத்திமம் மூன்றுஜாதி மரமானல் அதமம், பலஜாதி மரங்கள் கூடாது.

8. பாலுள்ளமரம், பழவிருக்ஷங்கள், முள்ளுள்ள மரங்கள் கூடாது.

## இன்னமரங்கள் வீட்டிற்கு உபயோகிக்கலாம் கூடாதென்பது.

9. பால்மரம், பாலுள்ள ஐந்துக்களுக்குக் கெடுதி. பழமரங்கள் புத்திரநாசம், முள்ளுமரங்கள் சண்டையுண்டாம், கடுகாட்டிலு

ள்ளது, நெருப்புப்பட்டது, பூமியில் ஜீரணமானது, இடிவிழுந்தது, காற்றினால் அடிபட்டு விழுந்தது, வழியிலுள்ளது, பட்டணத்துக்கு சமீபத்திலுள்ளது, நாச்சந்தியிலுள்ளது, தேவாலயத்திலுள்ளது, பாதிவெட்டப்பட்டது பாதிகாய்ந்தது பாதிநெருப்புப்பட்டது அங்க ஹீனமுள்ளதும், குட்டையானது, போரை விழுந்தது, அதிகப்பழமையமரம், மூன்றுகிளைகள் உள்ளது, அனேகம் கிளைகள் உள்ளது, வேறுமரங்கள் விழுந்து முறிந்தது ஸ்திரீ விருக்ஷங்கள் கூடாது.

10. பால்மரம் பக்ஷிஜாதிகள் வஸித்தமரம் தனக்ஷயம், காக்கைகள் அடைந்த மரங்கள் வியாதி, சுடுகாட்டிலுள்ளது மரண பயத்தைத்தரும், இடிவிழுந்தது, இடிபயத்தைத்தரும், காற்றினால் அடிபட்டது, காற்றினால் பிடிக்கப்படும், வழியிலுள்ளது குலத்தைக்கெடுக்கும், பட்டணத்துக்குச் சமீபத்திலுள்ளது பயத்தைக்கொடுக்கும், கல்பகவிருக்ஷம் மிருத்யு பயம், தேவவிருக்ஷம் தனக்ஷயம், நாச்சந்தியிலுள்ளது கூடாது. பாதிமுறிந்தது சீக்கிரம் கெடுதலைக்கொடுக்கும், பாதிஒடிந்தது தனக்ஷயம், அங்கஹீனமானது குழந்தைகள் பிறந்து இறந்துபோம், போரைவிழுந்தது ராஜபயம், அதிக ஜீரணமானது கிரகக்ஷயம், மூன்றுகிளைகளுள்ளது கெற்பபாதையுண்டாம், அனேகம் கிளைகளுள்ளது குழந்தைகள் பிறந்து இறந்துபோம், அன்னியர்களால் வெட்டப்பட்டது சத்துரு பயத்தைக்கொடுக்கும் நந்தவனத்திலுள்ளது கெடுதல், கொடிகள் படர்ந்தது தரித்திரம், புஷ்பவிருக்ஷம் குலக்ஷயம், புத்துள்ளமரம் ஸர்ப்பபயம், தேவாலயத்திலுள்ளது குலக்ஷயத்தைக்கொடுக்கும், ஸ்திரீவிருக்ஷம் ஸ்திரீபிரஜைகள் பிறக்கும், பொந்துள்ளது எஜமானனுக்குக் கெடுதல், லிங்கம் செய்தல் பிரதமை செய்தல் எந்திரம்போடல் துவாரம் செய்தல் இவைகளுக்கு கார்த்திகை, ரோகணி, மிருகசீரிஷம், திருவாதிரை, புனர்பூசம், இதில் சந்திரனிருக்கிற காலத்தில் மரங்கள் வெட்டக்கூடாது.

11. கிரகநிர்மாணம் தேவாலயம், இதுகளுக்கு மரங்களை சோதித்து நல்லநாளில் விதிப்படி வெட்டவேணும்.

12. மாஸதியாச்சியம், வாரத்தியாச்சியம், திதித்தியாச்சியம், சூனியதிதிகள், அமாவாஸிமை, சஷ்டி இதுகள் கூடாது. மரண

யோகம், மாசப்பிரவேசம், கிரகணங்கள் வைதிருதி விதிபாதம் இவைகளும் கூடாது.

13. மிருகசீரிஷம், புனர்வசு, அனுஷம், மூலம், உத்திரம், உத்திராடம், சுவாதி, திருவோணம், சுபம்.

## மரங்கள் வெட்டவேண்டிய விதி.

14. சமபூமியிலுள்ள மரத்தை, பூஜிக்கவேண்டும். கந்தபுஷ்பங்களினாலும் பூஜித்து விசேஷமான நைவேத்தியஞ்செய்து வேஷ்டியினால மூடி, பலநூல்களினால் காப்புக்கட்டி விதிப்படி பூஜிக்கவேண்டும்.

15. ஆசாரியனும் ஒருகாப்புக்கட்டிக்கொண்டு ஒருநாள் அந்த இடத்தில் வசித்து அந்தமரத்தைத்தொட்டுக்கொண்டு அந்த விருக்ஷத்திலிருக்கப்பட்ட எவ்வளவு பூதங்களிருக்கிறதோ அதுகளுக்கு சுபமுண்டாகட்டும் உங்களுக்கு நமஸ்காரம் செய்கிறேன்.

16. நான்கொடுக்கிற பூஜையை ஏற்றுக்கொண்டு ஏ மாசிரேஷ்டமே எனக்கு சுபமுண்டாகவேணும், என்று பிரார்த்திக்கவேண்டும். வீட்டுக்காகவும் அன்னியகாரியத்திற்காகவும் நான் பூஜிக்கிறேன், அதை கிரகிக்கவேண்டும், பாயஸம், மோதகம், தயிர், அன்னம், புஷ்பம், தூபம், தீபங்கள், சந்தனம், இதுகளோடு பூஜித்து, தேவர்கள், பிதுர்கள், பைசாசங்கள், ராக்ஷஸாள், யக்ஷர்கள், அசுரர்கள், விநாயகாள், இவர்கள் என்னால் கொடுக்கப்படுகிற பூஜையைக் கிரகித்துக் கொள்ளுங்கள், அந்தமரத்தை வலதுகையினால் தொட்டுக்கொண்டு, இந்தமரத்தில் எவ்வளவு பூதங்களிருக்கிறதோ, அவ்வளவு பூதங்களுஞ் சாஸ்திரப்பிரகாரம் என்னால் கொடுக்கப்படுகிற பூஜைகளை கிரகித்துக்கொண்டு, அன்னிய ஸ்தலத்தில் வாசஞ்செய்யவேண்டும் உங்களுக்கு நமஸ்காரஞ்செய்கிறேன் என்று பிரார்த்திக்கவேண்டும்.

17. மரத்தை ஜலத்தினால் அபிஷேகம் செய்து, தேன், நெய் இதுகளால் பூசப்பட்டிருக்கிற கோடாலியினால் ஈசான்னியதிக்கிலிருந்து பிரதக்ஷிணமாக வெட்டவேண்டும்.

## வெட்டப்பட்ட மரங்கள் விழும் திசையின் பலன்.

18. மரம் விருத்தாகாரமாய் வெட்டப்பட்டு கிழக்கு திக்கில் விழுந்தால் தனதானியம் உண்டாம், அக்கினி திக்கில் அக்கினிபயமுண்டாம், தெற்கு திக்கில் விழுந்தால் மிருத்தியுபயம், நிருதிதிக்கில் கலகம், மேற்கு பசு விருத்தி, வாயு திருடர்பயம், வடக்குதிக்கில் தனப்பிராப்தி, ஈசான்னிய திக்கில் மகாசிரேஷ்டம்.

19. மரங்கள் வெட்டப்பட்டதானது துண்டாய் முறிந்து விழுந்தாலும், மற்றொரு மரத்துக்கு மத்தியில் விழுந்தாலும் கூடாது.

20. மரம் வெட்டுங்காலத்தில் அந்தமரம் முறிந்து விழுந்து ஏதாவது இறந்துதானால், அந்த எஜமானனுக்காவாது தனநாசத்தைக்கொடுக்கும்.

21. ஒரேதுண்டாய் விழுந்தால் சகலபாக்கியத்தையும் கொடுக்கும், இரண்டாய் விழுந்தாலும் அதேபலன், மூன்றாய் விழுந்தால் துக்கத்தைக் கொடுக்கும், நாலுதுண்டு ஆறுதுண்டாய் விழுந்தால் தனத்தைக்கொடுக்கும், ஐந்தாய் விழுந்தால் மிருதியுபயத்தைக் கொடுக்கும், விழும்போது நடுவில் செதில்கள் உண்டானாலும் நடுவில் போனாயிருந்தாலும் ரோகபயம். அந்தமரம் உபயோகப்படக்கூடியதாயிருந்தாலும் பிரயோஜனமில்லை. செதில்கள் போயபவிருந்தாலும் சரியாகவும் விழுந்தால் தனமுண்டாம். கோணலாயிருந்தால் தனநாசம், காயம் உண்டானால் ரோகம், அங்கம் குறைவாயிருந்தால் பால்நாசம், பெரியதாயிருந்தால் பெண்குழந்தைகள் பிறக்கும் புழு உள்ளதும் ஊன் தண்ணீர்வடிந்தாலும் கூடாது.

22. சுக்கிலபக்ஷம் கூடாது, கிருஷ்ணபக்ஷம் உத்தமம்.

23. மேற்கண்ட விதிப்படி. வெட்டப்பட்டமரத்தை வண்டியிலாவது ஆள்களினாலாவது கொண்டுவந்து சேர்க்கவேண்டும். மற்றபடி செய்தல் கூடாது.

24. பாதிவெட்டப்பட்டது தன்னுடைய வீரியத்துக்கு கெடுதல், வெளுப்பாயிருந்தால் ஜயம், சித்திரவர்ணம் ஷூப்பிரதம், ரக்தவர்ணம் சஸ்திரபயம்

25. மரங்களைக்கொண்டு போகுங்காலத்தில் சிறுவர்களானு லும் பெரியவர்களானுலும் சொல்லுகிறபடி நடக்கும். சயறு அறு ந்தால், பாலர்களுக்குப்பீடை. மரங்கள் வெட்டவேண்டிய விதியை சாஸ்திரப்பிரகாரம் சொல்லப்பட்டது. அந்தகாலத்தில ஏற்படும் சகுனங்களையும் கவனிக்கவேண்டும்.

## 6-வது அத்தியாயம்.

## கிரப்பிரவேசவிதி.

1. நூதன கிரகப்பிரவேசத்துக்கு குரு, சந்திரன், இவர்கள் பெலமுள்ளவர்களாயிருக்கவேண்டும்.

2. ஆனி, ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி, பங்குனி, மாஸங்கள் கூடாது.

3. சித்திரை, வைகாசி, ஆவணி, ஐப்பசி, கார்த்திகை, தை, மாஸங்கள் உத்தமம்.

4. கிரகப்பிரவேசத்துக்கு முதல் நாள் வாஸ்துசாந்தியும் பூத பெலியும், செய்யவேண்டும். திக்குகளில் சிகப்புகலந்த அன்னங்க ளினுல் (ஹோ-பூதானி) என்ற மந்திரத்தினுல் நாலு திக்குகளிலும் பலிபோடவேண்டும்.

5. கிரகத்தில் கீழ்ப்பக்கத்திலும் மேற்பக்கத்திலும் தீபங் கள் வைக்கவேண்டும். நெய், தேன், பகூஷியங்களினுலும் ரகூஷர்க ளுக்கும் பலிபோடவேண்டும். (விஷ்ணுராரடமஸி) என்ற மந்திர த்தினுல் வாஸ்துபுருஷனை பூஜித்தல் வேண்டும் (நமோ அஸ்துவா ஸோதவாய) என்றமந்திரத்தினுல் ஸர்ப்பாாஜாவை பூஜிக்கவேண்டு ம் மற்ற தேவதைகளுக்கு காயத்திரியினுல் பூஜிக்கவேண்டும்.

6. மங்கலத்தை உத்தேசிக்கிறவன் காலசுத்தியை உத்தே சிக்கவேண்டும்.

## கிரகப்பிரவேசஞ்செய்-க் கூடியகாலங்கள்.

7. ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி, பங்குனி, ஆனி, இந்த மாஸங்கள் கூடாது பழயவீடுகளை புதிப்பிக்க பழுதுபார்க்க மாஸதோஷம் அவசியமில்லை.

8. வெகுதூரம் பிரயாணம், ராஜதரிசனம், கிரகப்பிரவேசம், இதுகளில் சூரியசுத்தியை அவசியம் கவனிக்கவேண்டும்.

9. ஒரு இடத்தில் பிரவேசமும் பிரயாணமும் செய்தாலும், அதுமுதல் 9 வது வருஷம், 9-வது மாஸம்; 9-வது நாள், 9-வது நாழிகையில் மறுபடி புறப்படக்கூடாது.

10. ஒரேதினத்தில் ராஜாவுக்கு பிரயாணம், பிரவேசம் இரண்டும் ஏற்பட்டால் பிரவேசத்துக்கு பட்டிலும் நாள் பார்த்தால் போதும்.

11. உத்தராயணத்தில் வியாழக்கிழமையில் உத்தமம். சூரியன் கடகம், கன்னி, தனுசு, கும்பம், இந்தராசிகளில் நிற்கும் காலத்தில் கிருமம், நகரம், பட்டணம், இதுகளுக்கு நூதனப்பிரவேசம் நடக்க, ஸ்திரநக்ஷத்திரம் சுபம். சரநக்ஷத்திரம் கூடாது. உக்கிரநக்ஷத்திரம் கூடாது. எஜமானனுக்கும் புத்திரனுக்கும் கெடுதல்.

12. இராகு தேவதை நக்ஷத்திரம் கூடாது, விசாகம் பதிநாசம், அக்கினி தேவதை நக்ஷத்திரம் அக்கினிபயம், சூன்னியதிதி கூடாது, செவ்வாய், சனி, ஞாயிறு, வாரங்கள் கூடாது. சோரபயம், மரணபயம், சரலெக்கினம், கூடாது. சுபகர்மாக்களுக்கு எது நீக்கப்பட்டதோ அதுவும் கூடாது, நந்தை, தெற்குமுகம், பத்திரை மேற்குமுகம் ஜயை வடக்குமுகம், பூரணை, கிழக்குமுகம்.

13. (1) வியாதி நிவர்த்தி, (2) தனஹானி, (3) தனப்பிராப்தி (4) பந்துநாசம், (5) புத்திரஹானி, (6) சத்துருஹானி, (7) ஸ்திரீஹானி, (8) பிராணஹானி, (9) சௌக்கியம், (10) 11) ஜயப்பிரதம் (12) நஷ்டம் இது அவர்களுடைய ஜன்மலெக்கினமிருந்து பிரவேச லெக்கினம் வரையில் உள்ள பலன்.

14. சுபகிரகத்தின் பார்வைபெற்று சுபலெக்கினமாக இருந்தால் நல்லது. நிந்திக்கப்பட்டது கூடாது. நிந்தித்த லெக்கினம் சராசியாயிருந்தாலும் சுபர் திருஷ்டி இருந்தால் கிரகப்பிரவேசம் செய்யலாம்.

15. வேஷ்ராசி நாசம், சடகம் வியாதி, துலாம் வியாதி, மகரம் தானியநாசம், இதுகளுக்கு பாபர் வீக்ஷண்ணியம் இருந்தாலும் கூடாது.

16. சித்திரை, சதயம், சுவாதி, அஸ்தம், பூசம், புனர்பூசம், ரோகணி, ரேவதி, மூலம், திருவோணம், உத்திரம், அவிட்டம், உத்திராடம், உத்திரட்டாதி, அசுவதி, மிருகசீரிஷம், அனுஷம், இந்த நக்ஷத்திரங்களில் எவன் வாஸ்துபூஜை செய்கிருனே, அவன் லெக்ஷமியை அடைகிருன்.

17. புதுவஸ்திரம் தரித்தாலாவது கிரகப்பிரவேசம், விவாகம் இதுகள் செய்யுங்காலத்தில் குரு சுக்கிரமூடம் கூடாது.

18. திருகோண கேந்திரங்களில் இருப்பவர்கள் நல்ல கிரகங்களாய் உபயராசியில் பலவான்களிருப்பது சுபம். 6, 8, 12-ல் சுப கிரகங்கள் கூடாது. அபஜித்து திருவோணம், பிரவேசம் பத்திமம், பிரஸித்த கிரகங்கள் ராஜாமுதலானவர்களுக்கும் பிராமணர்களுக்கும் அவசியம் விலக்கமாய் சொல்லப்பட்டவை கூடாது.

19. குரூரகிரகங்கள் இருக்கிற நக்ஷத்திரங்களும் முன், பின், நக்ஷத்திரங்களும் கூடாது. லத்தையினுல் கெடுக்கப்பட்டிருந்தால் கூடாது. கிரகணம், சங்கிராந்தி, தியாச்சியம், கூடாது.

20. சந்திரனிருக்கிற நக்ஷத்திரம் சுபம், ஜன்மநக்ஷத்திரத்துக்கு 10, 16, 18, 23, 25,-வது நக்ஷத்திரங்கள் கூடாது மற்ற நக்ஷத்திரங்கள் சுபம்.

21. குரு, சுக்கிரன், ஆட்சியிலிருந்தாலும் உச்சத்திலிருந்தாலும் கிரகப்பிரவேசம் செய்தால் சவுக்கியமுண்டாகும்.

22. சூரியன் லெக்கினம் ஆட்சி 4-லாவது இருந்தால் சுபத்தைக் கொடுக்கும்.

23. லெக்கனத்தில் குரு, சுக்கிரன், அஸ்தமனமும் 6-ல் சூரியனும், லாபத்தில் சனியும் பிரவேசகாலத்தில் இருந்தால் சத்துரு நாசம் ஏற்படும்.

24. லெக்கினத்தில் சுக்கிரனும், குரு சுகஸ்தானத்திலும், சூரியன் லாபத்திலும், செவ்வாய் 6-லும், சத்துருநாசம்.

25. குரு, சுக்கிரன், சுபஸ்தானங்களிலும் அங்காரகன் சூரியன், லாபஸ்தானத்திலும், இருந்தால் ஐசுவரியமுண்டாம்.

26. குரு, சுக்கிரன், சந்திரன், ஆட்சியிலிருந்தால் நல்லது.

27. சந்திரன் அஷ்டமத்திலிருந்தால் நூறு சுபயோகமிருந்தாலும் பிரயோஜனமில்லை. இடமிழுந்தமாத்துக்கு சமம்.

28. க்ஷீணசந்திரன் 8-லிருந்தால் 3-வருஷத்திற்குள் பாரியை நாசம்.

29. எட்டாமிடம் எந்த கர்மாவுக்கும் சுத்தமாயிருத்தல் வேண்டும். அப்படி இல்லாவிட்டால் கெடுதி உண்டாம்.

30. கிரகப்பிரவேசகாலத்தில் அசுபநக்ஷத்திரங்களும், குரூரக்கிரகங்கள் பார்வையும் கூடாது.

## படுக்கை இலக்ஷணம்.

31. குரு, தெய்வம், அக்கினி, பசு, பிராமணர் இவர்களுக்கு எதிரில் கால்நீட்டிப் படுக்கக் கூடாது. அப்படிப்படுத்தால் தனக்ஷயம் உண்டாம்.

## சயனிக்கும் திசையறிதல்.

32. கிழக்கே தலைவைத்துப் படுத்தால் சகலசம்பத்தும் உண்டாம். தெற்கு ஆயுசுவிர்த்தி, மேற்கு கவலை, வடக்கு மிருத்யுபயம், நான்குமூலையும் சகலசம்பத்தும் போய்விடும் வடக்கில் திருவநக்ஷத்திரமிருப்பதால் அந்ததிக்கில் தலைவைத்துப் படுத்தால் சகலரோகமும் உண்டாம்.

## இன்னின்னவைகளால் படுக்கை செய்யலாம்.

33. இரும்பு சம்பந்தமாயிருக்கல் வேண்டும். யானை, சிங்கம், பசு, முதலிய உருக்களை பல்லக்கு முதலியவைகளில் அமைக்க வேண்டும்.

## இன்னமரங்களினால் செய்யலாம்.

34. கட்டில், ஊஞ்சல்பலகை, நாற்காலி, சந்தனம், தேவதாரு திந்துகம், மருதம், சிம்சுவா, தேக்குமரம், உத்தமம். மற்ற முள்ளுள்ளமரங்களும், தெற்குதிக்கிலும், மேற்குதிக்கிலுமிருக்கிற, மரங்களும், மகாநதி சங்கமத்திலிருக்கிற மரங்களும், கெட்டமரங்களும் கூடாது. அப்படிப்பட்ட மரங்களில் கட்டில், ஊஞ்சல்பலகை பெஞ்சு, முதலியவைகள் செய்தால், குலக்ஷயம், வியாதி, சத்துரு இவைகளுமுண்டாம் அவசியம் சகுனம்பார்க்கவேண்டும்.

## சயன ஆசனங்கள் செய்யுங்காலத்தில் சகுனபலன்.

35. வெள்ளை, புஷ்பம், அபம், தயிர். அக்ஷதை, பழங்கள், பூரணகும்பம், இரத்தினகும்பங்கள். மங்களதிரவியம், ஸாதுக்கள் இவைகள் கண்டால் சுபம்.

36. சக்கிரவர்த்திக்கு 100-அங்குலநீளம் 92-அங்குலஅகலம் 3-அம்சம்உயரம்,, மற்றவர்களுக்கு 6-அங்குலம் குறைவு, குமாரர்கள், மந்திரிகளுக்கு 10-அங்குலம் குறைவு. மற்றவர்களுக்கு 18-அங்குலம் குறைவு, புரோகிதர்களுக்கு 20-அங்குலம் குறைவு, 6-அம்சமும் குறைவாயிருக்கவேண்டும்.

37. சமஸ்தவருணத்தாருக்கும் 6-அடி 6 அங்குலநீளமும் 3-அடி 6-அங்குல அகலமும் இருக்கவேண்டும்.

## கட்டில் முதலியவை செய்யப்பட்ட மரங்களின் பலன்கள்.

38. அசனம் ரோகவிர்த்தி, திந்துகம் பித்தம், சந்தனம் சத்துருநாசம், அசோகம் கீர்த்தி, சிம்சுவா சிறந்தது, பத்மகம் தீர்க்காயுசு, லெக்ஷ்மிபிரதம், தேக்கு, மங்களகரம்.

39. சந்தனமரத்தில் கட்டில்செய்து சுவர்ணரத்தினங்கள் இழைத்து படுக்கையில் படுப்பார்களானால், தேவதைகளாற் பூஜிக்கப் படுவார்கள்.

40. சிம்சுபா, தேவதாரு, திந்துகம், இவைகள் கலந்திருந்தாலும் சுபத்தைக்கொடுக்கும்.

41. மாமரம், பிராணபயம், அத்தி, சந்தனம், திந்துகம் கலந்திருந்தால் சுபம் மேற்கண்ட மரங்களிலும் ஆசனப்பலகைகள் செய்யலாம். ஆசனப்பலகைகளுக்கு அடிகுறைவாயிருக்கவேண்டும்.

42. கட்டில், செய்ய ஸ்திரீலெக்கினத்தில் ஆரம்பித்தால் அர்த்தநாசம், புருஷலெக்கினம் புத்திரலாபம்.

43. ஓணான் ஸர்ப்பம் இதுகள் போலிருந்தாலும், வளைவாயிருந்தாலும், கழுகு, கோட்டான், காக்கை, இதுகள் வஸிக்கப்பட்ட மரங்களானாலும் கூடாது.

44. சிகப்பு, கருப்பு, நிறமுள்ள மரங்கள் கூடாது, வெளுப்பு சமமான வாசனையுள்ளது, ஈரமுள்ளது, ஈசான்யதிக்கிலிருந்து கிடைத்தது சுபம், இப்படிப்பட்ட மரங்களில் செய்யப்பட்டது உத்தமம்.

### 7-அத்தியாயம்.

## கிணறு, குளம், ஓடை, ஏரி, நந்தவனம் இவைகள் நிர்மாணஞ்செய்யவேண்டிய விதிகள்.

1. கிணறு, ஓடை, ஏரி, குளம், நந்தவனம் இவைகள் ஆலயத்துக்கும், வீட்டிற்கும் எந்தவிதம் கவனிக்கவேண்டுமோ அதேவிதமாய் மாஸசுத்தங்களை கெவனிக்கவேண்டும்.

கிணறுவெட்ட உத்தேசிக்கிற பூமியை சூரியஸ்தமனமானவுட ன் நல்லதும்பை புஷ்பத்தையாவது, முல்லைபுஷ்பத்தையாவது அந்த இடத்தில் போட்டுவைத்து விடியுமுன் அதை எடுத்துப்பார்க்க புஷ்பம் வாடாமல் இருந்தால் அந்தஇடத்தில் நல்லஜலமிருக்கிறதென்று நிச்சயமாய் சொல்லவேண்டியது. இதற்காக சக்கிரங்கள் 10-வது அத்தியாயத்தில் போடப்பட்டிருக்கிறது.

2. முக்கோணம், சதுரம், விருத்தம், இப்படி இருக்கலாம் உத்தமம். வில்போலவும், கலசம்போலவும், தாமரைப்பூப்போலவுமிருப்பது மத்திமம். ஸர்ப்பம்போலவும், துவஜம்போலவும், உரகம் போலவும். இருப்பது அதமம்.

3. சித்திரைமாஸம் தனப்பிராப்தி, வைகாசி தானியலாபம், ஆனி பயம், ஆடி சோகநாசம், ஆவணி சௌக்கியம், புரட்டாசி பயம், ஐப்பசி ரோகம், கார்த்திகை துக்கம், மார்கழி கீர்த்தி, தை திரவியலாபம், மாசி அக்கினிபயம், பங்குனி எசஸுண்டாம்.

## கிணறு முதலியவைவெட்ட வாரநக்ஷத்திரம்.

### திதி முதலியவை.

4. ஞாயிற்றுக்கிழமை ஜலம் வற்றிப்போம், செவ்வாய்கிழமை ஜலமிராது, சனிக்கிழமை ஜலம் கெட்டுப்போம்,

5. புதன், வியாழன், வெள்ளி, திங்கள், சுபம்.

6. ரோகணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, பூசம், அனுஷம், சதயம், அவிட்டம், மகம், இந்த நக்ஷத்திரங்களில் கிணறு குளம் வெட்டவும், ஜலம் கட்டவும் உத்தமம்.

7. நந்தைதிதியானது மத்திமம், பத்திரை, ஜயை, பூரணை, உத்தமம். ரிக்த்தை அதமம்.

8. லெக்கனத்தில் சந்திரனிருந்தாலும் ஜலஉதயலெக்கினத்தில் சந்திரனிருந்தாலும், கேந்திரங்களிலிருந்தாலும். 12-ல் இருந்தா

னும், லெக்கனத்தில் குரு, சுக்கிரன், புதனிருந்தாலும், ஜலம் சுத்தமாயும், திதிப்பாயும், வாசனை உள்ளதாயும், எப்போதும் ஜலமிருந்து கொண்டே இருக்கும்.

9. அங்காரகன் 3-லும், சுக்கிரன் அஸ்தமனமாயும் 6, ல் சூரியனும் 11-ல் சனியும், 6, 8, 12-ல்சுபகிரகங்களும் இருக்கக்கூடாது.

10. சனி, 3-லும் சந்திரன் 7-லும், சூரியன் 6-லும் 11-ல் செவ்வாயும், கேந்திரங்களில் சுபாளும், அஷ்டமத்தில் பாம்புமிருந்தால் வெகுநாளைக்கு ஜலமிருக்கும் தனம் புத்திரமித்திரர்களைக் கொடுக்கும்.

11. கேந்திர திருகோணங்களில் சுபாளிருந்து அஷ்டமசுத்தமாயிருந்தால் எல்லாகாரியங்களுக்கும் நன்மை கிணறு, குளம், ஓடை, உப்பரிகை, கோபுரங்கள் இதுகள் செய்பநன்று.

12. சந்திரன், உதயகாலத்திலாவது திங்கட்கிழமையிலாவது சந்திரனிருக்கிற லெக்கினத்திலாவது குரு கேந்திரங்களிலாவது இருக்கும் காலத்தில் கிணறு முதலியவைகள் வெட்டலாம்.

13. ஸிம்மம், தனுசு, விருச்சிகம், இந்த மூன்று லெக்கனமும் கூடாது. மற்றவைசுபம்.

14. நல்லகிரகங்கள் சம்பந்தப்பட்ட லெக்கனமாயும் ஜலநக்ஷத்திரமாயும், நல்லோர்கள் பார்வையுள்ள லெக்கனமாயும், சுபயோகமாகவும் இருக்கப்பட்டகாலத்தில் ஜலம் உண்டுபண்ணவேணும்.

15. அக்கினி, தெற்கு வாயு இந்தமூன்று திக்கும் கூடாது மற்றதிக்குகள் சுபம்.

16. கிழக்கு ஐசுவரியம், அக்கினி புத்திரநாசம், தெற்கு ஸ்திரீநாசம், நிருதி அபிமானகேடும் தனக்குறைவு, மேற்கு சுபம், வாயு சத்துருபீர்த்தி, வடக்கு கீர்த்திபுண்டாம். ஈசான்னியம் ரொம்பச் வுக்கியத்தைக்கொடுக்கும், மத்தி தனநாசம், இந்த வசனம் வாஸ்துசாத்திரவாளி என்னும் புஸ்தகத்திலிருக்கிறது.

17. தெற்கு முதல் வாயுவரையில் ஒடையாயும், வருண திசையிலிருந்து வடதிசைவரையில் ஒடையாக இருந்தாலும்கூடாது அப்படி இருந்தால் வியாதி, கஷ்டம், கடன், முதலியவைகள் உண்டாம்

## 8-ம் அத்தியாயம்.

## சல்லி நிர்ணயம்

1. சல்லியம் உண்டா இல்லையாவென்று கேட்கும்போது அடியளந்து அவச்சாயை பாதச்சாயை நீக்கிநின்ற அடித்தொகையுடனே 28 ஒருதுரைதையும், மேஷம் முதல் உதயம் தொடங்கி ஒருதுகையும், இந்த இரண்டையும் சேர்த்து, 12-ல் பெருக்கி 16-க்குகொடுத்து நின்ற சேஷத்தைக்கொண்டும், சேஷமில்லாதிருந்தது 16-ஐக்கொண்டும் சல்லியம் சொல்லப்படும்.

2. சல்லியம் அறியும்வகை சல்லியம் 16. 1. தலைமண்டை 2. எலும்பு 3. செங்கல் 4. ஓடு 5. விறகு 6. விக்கிரகம் 7. சாம்பல் 8. கரி 9. பிணம் 10. தானியம் 11. பொன் 12. கல் 13. தேரை 14. விலங்கின் கொம்பு 15. செத்தநாய் 16. ஜாடி மூன்றுமில்லை.

3. சல்லியத்தில் நல்லன தீயன அறிய 1-முதல் 16 வரையில் சொல்லப்பட்ட சல்லியத்தில் முன்காட்டிய கணக்கின்படி எதுவருகிறதோ அதையே, சல்லிய வினவருக்கு சொல்லவேண்டும். அச்சல்லியத்தில், தானியம், பொன், விலங்கின் கொம்பு, இம்மூன்று வஸ்துக்களாயின் உத்தமம். மற்ற 12ல் எதுவானாலும், தீது 16-க்கு ஜாடியென்றதற்கு அதில் சல்லியமில்லை என்ற அர்த்தமாம்.

4. சல்லிய சக்கிரமும், சல்லிய இருப்பிடமும் சல்லிய வடைப்புநாள் முதலிய குறிப்பு.

கிழக்கு, மேற்கு, 4-அறை தெற்கு, வடக்கு, 7-அறையுமாக வரையப்பட்ட நின்ற சல்லிய சக்கிரத்தின் அளவு 28-ல் சந்திரன் நின்ற

நாளானையிலே, சல்லியம் இருப்பனவாம் அச்சந்திரன் நின்ற நாளானை யை அறிதற்கு கிருத்திகை முதலாககொண்டு அடைத்து, வழங்கிவ ருகிற சல்லிய சக்கிரத்தைச் சாங்கோபசாங்கமாய்த் தெரிந்துகொண் டு மேற்கண்ட சல்லியம் பார்க்கவேணும், அபிசித்து உள்பட நக்ஷ த்திரஎண் 28)

## முற்பகலுக்கு சல்லிய சக்கிரம் அடைப்புவிதி.

5. கீழறை 7-னுள் 2 அறைவிட்டு மூன்றும் அறைமுதல் தெற்கு நோக்கி, 3 அறையும் அதற்கு மேலறைமுதல் வடக்கு நோக்கி, 4 அறையும் அதற்கு மேலறைமுதல் தெற்குநோக்கி, 5-அ றையும் அதற்கு கீழறைமுதல் கிழக்கு நோக்கி 2-அறையும் உட னே வலஞ்சுதல, தென்கிழ்முதல் 14-அறையுமாக எண்ணி முறை யே முற்பக்கம் கார்த்திகை முதலாக அடைக்கவேண்டும்.

## பிற்பகல் முன்னிரவு பின்னிரவு ஆகிய இவற்றின் அடைப்புவிதி.

6. பிற்பகலுக்கு, மகமும், முன்னிரவுக்கு அனுஷமும் பின் னிரவுக்கு அவிட்டமும், முதலாகக்கொண்டு அடைப்பதென்றும் ஒ வ்வொருநாட்களுக்கும் நாழிகை இரண்டேஅரைக்கால் என்றும் சூரி யன்வெமுற்றிருப்பதே இருந்துபார்க்கும் திசையென்றும் அறியப் படும் முற்பகலுக்கு மேற்குமுகமும், பிற்பகலுக்கு கிழக்குமுகமும், முன்னிரவுக்கு வடக்குமுகமும், பின்னிரவுக்கு தெற்குமுகமும், இரு ந்து பார்க்கும் திசைகளாம். முன்னிரவுக்கு கிழக்குமுகம், பிற்பகலு க்கு வடக்குமுகம், இப்படி பக்ஷாந்திரங்களில் சொல்லப்படுகிறது.

7. சல்லிய இருடத்தை கார்த்திகை முதலாகக்கொண்டு கூறுவதுபோல மற்ற எல்லாநாட்களையும் கொண்டு கூறுவதும் கார் த்திகை முதலாகக்கொண்டு அடைத்த முற்பகற் சக்கிரத்தால் சந்தி

ரன் நின்ற நாளறையிலே சல்லியம் இருப்பனவாம். அக்கார்த்திகை யையும் மற்ற 27-நாட்களும் 2-நாழிகைக்கு ஒவ்வொன்றாக உதிக்கும் இயல்பிற்றாதல் அங்கனம் உதித்த ரோகணி முதலிய 6-நாட்களை முதலாகக்கொண்டு அடைக்கவேண்டிய முற்பகற் சக்கிரத்திலும் மகம் முதல் 7-நாட்கள் முதலாகக்கொண்டு அடைக்கவேண்டிய முற்பகற் சக்கிரத்திலும், அனுஷமுதல் 7-நாட்களைக்கொண்டு அடைக்கவேண்டிய முன்னிரவு சக்கிரத்திலும், அவிட்டம் முதல் 7-நாட்களைக்கொண்டு அடைக்கவேண்டிய பின்னிரவு சக்கிரத்திலும், சந்திரன் நின்ற நாளறையிலே சல்லியம் இருப்பனவாகத்தெரிந்துகொள்ளவேண்டும்.

## சல்லிய இருப்பிடத்தை இராசிகளைக்கொண்டு கூறலாம்

8. இந்தராசி 1-க்கு 3-நாள்வீதம் உடைத்தாதலால் உதித்தராசியினிடத்தில் உதித்த நாட்களைக்கொண்டும், முற்பகற் சக்கிரத்தில் கார்த்திகையை நிறுத்திவைத்ததுபோல் நிறுத்தி அதனது அறையிலே இதற்குப்பின்னுள்ள மற்ற 27-நாட்களையும் அடைத்து சந்திரன் நின்ற நாளறையிலே சல்லியம் இருப்பனவாம்.

## சல்லியம் உண்டு இல்லையென்பதைத் தெரிவித்தல்.

9. கண்டங்களிலே நின்ற சுபக்கோட்கள் கூடிநிற்கினும் நோக்கினும், சல்லியம் உண்டென்றும் கூடிய நிற்றலும் நோக்கிலும் இல்லையாகில் சல்லியம் இல்லை என்றும் கண்டங்களிலே நின்ற சந்திரனை செவ்வாய் கூடினும நோக்கினும், செவ்வாய்மற்ற நாளறையிலே ஆட்டின் எலும்பு உண்டென்று சொல்லப்படும்.

10. பிராமணர் எலும்பு, பசு எலும்பு, செங்கல், பொன், எதாயினுமொன்றுண்டென்பது. கண்டங்களிலே நின்ற சாதியை குரு கூடிநிற்கினும், நோக்கினும் குருநின்ற நாளறையிலே பிராமணர் எலும்பு, பசு எலும்பு, அல்லது செங்கல் பொன் இவற்றுள் ஒன்றுண்டென்று சொல்லப்படும்.

## விக்கிரகம் எருமை எலும்பு உண்டென்பது.

11. கண்டங்களிலே நின்ற சந்திரனை சூரியன் கூடி நிற்கினும் நோக்கினும், சூரியன் நின்ற நாளரையிலே விக்கிரகம் உண்டென்றும் சனி, கூடி நிற்கினும் நோக்கினும் சனி, நின்ற நாளரையிலே எருமை எலும்பு உண்டென்றும் சொல்லப்படும்.

## பாம்பு அல்லது பாம்பின் எலும்பு புற்று இவைகளுக்குண்டென்பது.

12. கண்டங்களிலே நின்ற சந்திரனை பாம்பு கூடிநிற்கினும் நோக்கினும், பாம்புநின்ற நாளரையிலே பாம்பிதல்- புற்றுதல் பாம்பின் எலும்பாதல் உண்டென்றுசொல்லப்படும்.

## நாயெலும்பு வெள்ளி இவைகள் உண்டென்பது

13. கண்டங்களிலே நின்ற சந்திரனை புதனகூடி நிற்கினும் நோக்கினும், புதன்நின்ற நாளரையிலே நாயெலும்பு உண்டென்றும் சுக்கிரன் கூடிநிற்கினும் நோக்கினும், சுக்கிரன்நின்ற நாளரையிலே வெள்ளி உண்டென்றும் சொல்லப்படும்.

14 கண்டங்களிலேநின்ற சுபக்கோட்களை பாபக்கோட்கள் நிற்கினும் நோக்கினும், சல்லியம் வினவிய மனையை உடையவனுக்கு நினைத்தகருமம் முடியாது. அந்த மனையின் ஆட்சியுமில்லாமற்போம் அவன் வறுமையினால் துக்கப்படுவான்

15. கண்டங்களிலே சுபக்கோட்கள் அன்றி பாபக்கோட்கள் நிற்கினும் நோக்கினும், தீமையுண்டாம். அன்றி அக்கண்டங்களிலே, சுபக்கோட்கள் நிற்கினும் நோககினும், நன்மையுண்டாம்.

16. கண்டங்களிலே பாபிகள் அல்லாமல் சுபக்கோட்கள் நிற்கினும் நோக்கினும் மனைவளப்பமும் செல்வமும், அதிகரிக்கும் மனையில் ஆட்சியும் உண்டாம்.

17. உச்சிக்கண்டத்திலே சுபக்கோட்கள் நிற்கினும் அதனை நோக்கினும், அப்பிள்ளையைத்தானே அனுபவிப்பன் பாபக்கோட்கள் நிற்கினும் நோக்கினும் பிறர் அனுபவிப்பர் அல்லது பைசாசங்கள் ராக்ஷதர்கள் வாஸஞ்செய்யும்.

18. சல்லியம் இருத்தலின் ஆழம் தெரிவிக்கப்படுகிறது சல்லியம் எந்தக்கோட்களால் உணர்த்தப்படுகிறதோ அந்தக்கோட்களின் கதிர் எத்தனையுண்டோ, அதை சாண் 2 கொண்டது முழமாகக்கணக்குச்செய்து எத்தனை முழமோ அதுபோக பாக்கியை சாணுகவும் நட்பு, ஆட்சி, உச்சத்தில் ஏறுவன குறைவன அறிந்து இத்தனைமுழம் இவ்வளவு சாண் ஆழத்தில் இருக்கிறதென்று சொல்லவும்.

19. சல்லியம் விளைவிய மனையை, சிறுகோலால் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, அகல நீளங்களை தனித்தனியே அளந்து இரண்டு தொகையையும் ஒன்றோடொன்றாகப் பெருக்கி 28-க்கு கொடுத்தவட்டம் சாணும் மிச்சத்தை 21-ல் பெருக்கி 28-க்கு கொடுத்த வட்டம் அங்குலம்.

20. உதய ஆரூடராசிக்கு ஏழாமிடத்தில் கிரகங்கள் நிற்குமாகில் அதற்கு மூன்று, நான்கு, ஏழு, பத்தில் சந்திரன் நின்றால் சல்லியமிருக்கிறதென்றும் நிச்சயமாய்ச்சொல்லவும். அதன்பலன் ஸ்திரீகளைக்கொல்லும், குலத்துக்குக் கெடுதிவரும், பொருட்சேதம், உயிர்ச்சேதம், உண்டாம் சௌக்கியமில்லை.

21. உதயஆரூடங்களில் கிரகங்கள் நிற்கில் அதற்கு கேந்திரங்களில் சந்திரன், சனி, நின்றால் அந்தமனையில் சார்பாலும் உயிரிருக்கிறதென்று அறியவேண்டும்; அதற்குபலன் சோரபயமும் அச்சமுமுண்டாகும், பாரியாள் விரோதமும், சம்பத்தும் நசிக்கும். சன்னை பீடையுண்டாம், பாம்பினால் அச்சமுண்டாகும்.

22. உதய ஆரூடத்துக்கு ஐந்தாமிடத்தில் கிரகங்கள் நின்று அதற்கு கேந்திரங்களில் சந்திரன் நின்றால், கருங்கல், பாம், மட்டை எலும்புகள் இருக்கிறதென்று சொல்லவேண்டும், அதற்குப்பலன் குலத்தைக்கெடுக்கும்.

23. உயிர் என்பது ஆரூடலெக்கினம், இதற்கு இரண்டாமிடத்தில் சந்திரன் நின்றால் அதற்கு உயிர் முதலிய சல்லியமிருக்கிறதென்றும் சொல்லவும் அதற்குப்பலன் அந்தவீட்டு எஜமானனுக்கு சௌரியம், சம்பத்து, பலம், இவைகள் அழியும்.

24. காரியஸ்தானத்துக்கு பத்தாமிடத்தில் கிரகங்கள் நின்றால் கருங்கல், எலும்பு, தூறு, ஈயம், பித்தளை, இவைகளில் ஒன்றாகிலு மிருக்கும். அதற்குப்பலன் அரட்டி, சொப்பனமுதலியதுண்டாம் பொருளழிந்து அந்தமனை சேதமாகி பாழடைந்துபோம்.

25. 6, 8, 12, மிடம்இவைகளில் கிரகங்கள் நின்றால் சல்லியமுண்டு பெரும்பிணியாகிய கர்மவியாதி உண்டாம், சாடி, ஓடு, எலும்பு, இருக்குமென்றும் உதயலக்கினத்தில் கிரகங்கள் நின்று அதற்கு கேந்திரங்களில் சந்திரன் நின்றால் சல்லியமுண்டென்று அறியவும் அதற்குப்பலன் ஓடிவருகிற கப்பல் சமுத்திரத்தில் உடைந்தார்போல யோகமானது கெடுதல் அடையும், ஸ்திரீகளுக்கு மரணமுண்டாம் குலத்துக்கெல்லாம் கெடுதி நேரிடும்.

26. ஆருடராசிகளில் உதயத்தில் குரு நின்றாலும் ஏழு நாலு பத்தில் சனியும், சந்திரனும் நின்றாலும் கரி, ஓடு, எலும்பு, இவைகள் இருக்கிறதென்றும் 2, மிடம் 3, மிடம் இவைகளில் சந்திரனும் சூரியனும் கூடிநின்றால் சிலை, கருங்கல், கானும் செவ்வாயும் சூரியனும் சந்திரனும் கூடிநின்றால் வெண்கலம், பித்தளை, ஓடு, எலும்பு, இவைகள் இருக்கிறதென்றும் சொல்லவேண்டும்.

27 உதயம் ஆருடராசி சந்திரன் நின்ற ராசி உடல், என்றும் உதயாரூடம் உயிர் இந்தராசிகளில் முழுநாளை எண்ணி பலன் சொல்லவும் யாதாமொருவர் கேட்கவரில் அவரை ஒரு ராசியைத் தொடச்சொல்லி, அந்தராசிக்கு சனி, சூரியன், செவ்வாய், 4-மிடம், 7-மிடம், 10-மிடம், இவ்விடத்தில் அமரபக்ஷம் சந்திரனுடன் கூடிநின்றால், பட்டமரமும், யானையோடு, எலும்பு, சாம்பல், இருக்கிறதென்று சொல்லவேண்டும்.

28. சந்திரனுக்கு 7-மிடம், 10-மிடம், 4-மிடம், இவைகளில் ராஜாவாகிலும் புதனாகிலும் இருந்தால் அதற்கு 3, 6, 8, ல் சூரியன் இருந்தால் நிதி உண்டென்று சொல்லவும்.

29. சுக்கிரன், புதன், கூடிநிற்க அதற்கு 7-ல் ராஜனிருக்க இவர்கள் வக்கிரமில்லாதிருக்க, ராஜனுக்கு 6-ல், சனியிருக்க திரவியமுண்டென்று சொல்லவும்.

30. வீடு கட்டும்போது சோதனை செய்யாமல் வீடுகட்டினால் அதன்பலன், பசுவிருந்து பாலில்லாமல் இருந்தால் குழந்தைகள் எலும்பு கீழ்பக்கத்தில் இருக்கிறதென்று சொல்லவும்.

31. ராஜபயமுண்டானால் அக்கினி மூலையில் குதிரை எலும்பு இருந்தால் எண்ணாளும் யோகமுண்டாயிருக்கும்.

32. யானை எலும்பு தென்பக்கத்தில் இருந்தால் எண்ணாளு மரணமுடையவனாக இருப்பன்.

33. பன்றிஎலும்பு வடமேற்கு மூலையில் இருந்தால் என்றைக் கும் அபமிருத்திய தோஷத்தை யடையும்.

34 எருதெலும்பு மேற்கு திக்கில் இருந்தால் என்றைக்கும் ஆரூடம் சொல்லுவான்.

35. கழுதை எலும்பு வாயு மூலையிலிருந்தால் என்றைக்கும் அர்த்தநாசம் உண்டாம்.

36. ஆட்டெலும்பு வடக்கேஇருந்தால்என்றைக்கும் சண்டை யுண்டாம்.

37. நாயெலும்பு ஈசானியத்தில் இருந்தால் என்றைக்கும் வீட்டில் கலகம் நடக்கும்.

38. நடுவில் தலை மண்டையோடு இருந்தால் எப்பொழுதும் கலகமாக இருக்கும்.

39. வீடுகட்டவேணுமானால் 6-சாண் ஆழம் மண்வெட்டியா ல் வெட்டி சோதித்து கட்டவேண்டும்.

40. கோவில்களுக்கு 7-சாண்ஆழமும் பிராமணாளுக்கு 6-சா ண் ஆழமும், வைசியர்களுக்கு 4-சாண் ஆழமும், சூத்திரர்களுக்கு 3-சாண் ஆழமும் வெட்டிபார்க்கவேணும்.

## சல்லிய விஷயம் விசுவகர்மபிரகாசிகையிலுள்ளபடி.

1. யாதாமொருவர் வீடுகட்ட ஆரம்பிவிக்கிற காலத்தில் அந்த எஜமானனுடைய திரேகத்தில் அரிப்பு உண்டாகில் அவன் தன் திரேகத்தை சொரிவானாகில் அந்தஇடத்தில் சல்லியம்இருக்கிறதாக ச்சொல்லவேண்டும். உடனே அவரை அந்தஇடத்தை விட்டு அப் புரப்படுத்திவிடவேண்டியது அல்லது பயமாவது அல்லது ஆலசிய தையாவது கொடுக்கும்.

2. தலைமயிரை தொடுவானாகில் 8, முழத்துக்குக்கீழ் சல்லியமிருக்கிறதாகச் சொல்லவேண்டும்.

3 மூக்கைத் தொடுவானாகில் அதே விதமாகச் சொல்லவும் மூத்து முதலிய சல்லிய மிருக்கும்.

3. கையோடு கையைச்சேர்த்துக் கொள்வானாகில் 6-முழத்திற்கு கீழ் குதிரையின் எலும்புகளிருக்கும்.

4. 6-மடிப்பாக மடிக்கப்பட்டகயிற்றினால் சோதிக்கவேண்டும் அப்படி பிடிக்கப்பட்ட கயிற்றைபாராவது தாண்டுவார்களாகில் ஆள் பிரமாணத்தின் கீழ் சல்லியமிருக்கிறதாகச் சொல்லவும்.

5. பார்க்க உத்தேசிக்கும் பூமியை 9-அறையாகத் தடுத்து அதில் அடியில்கண்ட எழுத்துக்களை கிழக்கு முதலாகப் போடவும் 1. அ ஆ, 2 க கா 3. ச சா 4. ட டா 5. த தா 6. ப பா 7. ய யா 8. ச சா 9. ஹ இந்த எழுத்துக்களை வரிசையாக எழுதல்வேண்டும்.

6. அந்தபிரசினம் கேட்பவருடைய வாயிலிருந்து அ என்கிற எழுத்து உதயமாகில் மனிதர் எலும்பு 1½ முழஆழத்தில் இருக்கிறதாகவும் அதனால் அந்த எஜமானனுக்கு மிகுந்தபயமுண்டாமென்று சொல்லவும்.

7. க, தென்கிழக்கு கழுதை எலும்பு 2-முழ ஆழத்தின்கீழ் இருக்கிறது. அதனால் ராஜதண்டம்பயம் இவனுக்குண்டாம்.

8. ச-பிரசினம் உண்டானால் தெற்கு திசையில் இடுப்புஅளவு ஆழத்தின் கீழ் நரசல்லியம் இருக்கும். அதனால் எஜமானனுக்கு மரணபயம் உண்டாம்.

9. ட பிரசினம் உதயமானால் நிருதிதிக்கில் க௨ முழஆழத்தின் கீழ் நாயெலும்பு இருக்கும். அதனால் சிசுமரணமுண்டாம்.

10. த. பிரசினம் உண்டானால் மேற்குதிக்கில் க௨ முழஆழத்தின் கீழ் நரி எலும்பு இருக்கும். அதனால் அந்த வீட்டில் எஜமானனுக்கு இருப்புக்குடுக்காது.

11. ப என்ற பிரசினை உதயமானால் வாயுமூலையில் 4-முழஆழத்துக்குக்கீழ் மனுஷியனுடைய சல்லியமிருக்கும் அதனால் மித்திர நாசமாம்,

12. ய, என்றபிரசினை உதயமானால் வடக்கு திக்கில் சஇ முழ ஆழத்துக்கு கீழ் கழுதையின் எலும்பு இருக்கும் அதனால் பசு ஹானி உண்டாம்.

13. ச, என்ற பிரசினையுண்டானால் ஈசானிய திக்கில் சஇ முழ ஆழத்துக்கு கீழ் பசுவெலும்பு இருக்கும். பசு, தனம். முதலியவைகளுக்கு ஹானியுண்டாம்.

14. ஹ, என்ற பிரசினம் உண்டானால் மத்திய கோஷ்டத்தில் மார்பளவு ஆழக்துக்குகீழ் மயிர், மண்டையோடு சாம்பல், லோகங்கள் முதலியவைகளிருக்கும் அதனால் பலவித கஷ்டங்கள் உண்டாம.

15. அடியில் கண்ட மந்திரத்தை 21-தடவை ஜபம்செய்துபிறகு சல்லியம் பார்க்க வேண்டும்.

ஓம் ஹ்ரீம் கஞ்சணிகௌரிஹூம்தயெவயயவயய ஹ்ரீம்ஸ்வாஹா ।

16. ஜலம் காணும் வரையிலாவாது அல்லது ஒரு ஆள்மட்டமாவது பூமியை சோதிக்கவேண்டும்.

17. சல்லியம் தாது பொருளாகவாவது மூலப்பொருளாகவாவது ஜீவப்பிராணிகளின் சம்பந்தபட்டப்பொருளாகவாவது இருக்க வேண்டும். ஆகையால் அவைகளை பரிக்ஷித்தே வீடு கட்டவேணும்.

18. ஒரு வீட்டை கட்டுமுன் அப்படிப்பட்ட சல்லியமிருக்கிறதாகத் தெரியாவிட்டாலும், பிறகு அந்தஇடத்தில் வசிப்பதனால் உண்டாகும் பலன்களால் தெரியலாம் நல்ல வீடாயிருந்தாலும், சல்லியமிருக்குமாகில், கெட்ட சொப்பனங்கள் வியாதி பலவிதமாய் நஷ்டம் முதலியவைகள் உண்டாம்.

19. இதர சல்லியங்களையும் சுருக்கமாய் சொல்லுகிறேன் -7 ராத்திரி வரையில் பசு, நாய், குதிரை. இவைகள் கத்தினாலும், ஸ்திரீகளால் சண்டையுண்டாம் காட்டுமிருகங்கள் வீட்டில சங்கை இல்லாமல் வந்து சேரும். கழுகு, புலி, புறு, நரி, கிருஷ்ணஸர்ப்பம் இனியாவது வந்து சேரும். மனிதர் எலும்பு எங்கேயாவது கிடந்து அகப்படும். இடிவிழும், காற்றினாலாவாது, நெருபபினாலாவது கெடுதியடையும். எக்ஷர், ராக்ஷதாள், பைசாசங்கள், வாஸஞ்செய்யும்

காக்கைகளாவது இராத்திரியில் வீட்டில் வாஸஞ்செய்யும் எப்போ தும் ஸ்திரீ புருஷர்களுக்கு கலகமுண்டாம்.

20. மரங்களினுல் உண்டாகும் வித்தியாஸத்தினுலும் சல்லிய முண்டாம், பசுவின் எலும்புகளாவது அல்லது இதர சல்லியங்க ளாவது இருந்தாலும் சல்லியத்தை எடுத்துவிடவேண்டும்.

மூங்கில் முதலியவைகளால் உண்டாகும் சல்லியங்களையும் வாசல்படியினுல் உண்டாகும் சல்லியங்களையும் வெளிப்பக்கத்தில் உண்டாகும் சல்லியங்களையும் சமுக்கியத்தை உத்தேசிக்கிறவன் அவ சியம் கவனித்து நிவர்த்தி செய்யவேணடும்.

21 சல்லியம் எடுக்கும் தினத்துக்கு முதல்நாள், வாஸ்துபூ ஜை செய்யவேண்டியது, சுபதினத்தில், சுபநக்ஷத்திரத்தில், தாராபல ன் சந்திரபலன் ஒத்திருக்கும் காலத்தில, பிராமணுளைக்கொண்டு சல் லியம் உத்தாரணம் செயயவேண்டியது.

நல்ல லக்ஷணமான கல்லினுல் ஆதாரசிலைசெய்து நந்தை தலை, பத்திரை, வலதுகை, ரிக்தை இடதுகை, ஜயை இரண்டுகால் பூரணை நாபிதேசம், இந்த விதமாக அந்தசிலையில் வாஸ்து புருஷனை உத்தேசித்து பூஜித்தல் வேண்டும்.

22. பூமியை மூன்று பாகமாகச்செய்து நடுமத்தியபாகத்தில் முருகெஜும் ஆழம் பள்ளம்வெட்டி, நாலுதிக்கிலும நந்தை,பத்திரை, ஜயை, ரிக்த்தை, என்ற தேவதைகளை பூஜிக்க நடுமத்தியில் இடுப் பளவு ஆழம் பள்ளம்செய்து சிலையின் மத்தியில் சொஸ்திகம் என்று சொல்லப்பட்ட சோபனமான எந்திரத்தை யெழுதவேண்டும் புத்தி மானுக இருக்கிற ஸ்தபதியானவன் அதை மூன்றுபாகமாக செய்ய வேண்டும். அதில் நடுபாகத்தில் நாற்சதுரமாகப் பள்ளம் வெட்டி நாலுதிக்கிலும் நந்தை, பத்திரை, ஜயை, ரிக்த்தை, என்னும் தேவ தைகளை ஈசானியத்தில் நந்தையும், ஆக்கினேயத்தில் பத்திரையை யும், கன்னியில் ஜயையும், வாயுவில் ரிக்த்தையும், நடுவில் பூரணையை யும், வேதத்தை அறிந்தவன் கிரமப்பிரகாரம் பூஜிக்கவேண்டும்.

23. வெளியில் 8 கலசங்களை வைத்து அதின்மேலே நூல்க ளால் சுத்தப்பட்டு சமஸ்தமான புண்ணிய தீர்த்தங்களாலும் நிரப்பி மாவிலை, தேங்காய்,தெர்ப்பை,புஷ்பம் இவைகளால அலங்கரித்து வரி சையாக அஷ்டதிக்குபாலகாகளையும் ஸ்தாபிகக வேண்டியது. பூர ணகும்பத்தின் கீழ் நவதானியங்களால் நிரபபப்பட்டிருக்கவேண்டும்.

அதன்மேல் பூர்ணகும்பங்களை ஸ்தாபித்து விதிப்படி பூஜிக்கவேண்டும். குங்குமம், சந்தனம், கஸ்தூரி, தேவதாரு, பத்மம் முதலியவைகளை அதில்போடவேண்டும். பன்றியின் சிங்கத்தில்ஒட்டியமண், யானைதந்தம், எருதின் கொம்பு, சிம்மத்தின் நகம், இதில் ஒட்டியமண்ணையும், தேவாலய வாசலில் உள்ளமண், பஞ்சகௌயம், பஞ்சமிர்தம், ஐந்துதளிர், ஐந்துமரத்தின் பட்டை, ஐந்துவிதமான பழத்தின் ரஸம், இவைகளை கலசத்தில் போடவேண்டும். மூன்றுவிதமான மது, 7-விதமான தானியம், இவைகளும் போடவேண்டும் அதில் கணபதி முதலான தேவதைகளை ஆவாகனம்செய்யவேண்டும் பிறகு கிரகத்தில் வருணனை ஸ்தாபனம்செய்து, முன்சொன்ன பிகாரம் வேதமந்திரங்களினாலே, ஆவாகனம் செய்து ஆகமங்களில் சொல்லப்பட்ட மந்திரங்களினாலும், 800-காயத்திரியினாலும், 800-வியாகிருதியினாலும், (திருணிபத என்கிற) ரிக்கினாலும் 100-தாமும் (தத்விப்ராஸோ என்கிற) ரிக்கினாலும் 100-தாமும் (அதோதேவாய என்கிற) ரிக்கினால் 300-தடவை அக்கினியில் ஹோமஞ்செய்யவேண்டும்.

24. இந்தப்படி பிராமணர்களால் ஹோமஞ்செய்து பிறகு வாஸ்து ஹோமஞ் செய்யவேண்டும். நவக்கிரக ஹோமங்களையும் கணபதி திக்குபாலர் முதலானவர்களுக்கும், க்ஷேத்திரபாலர் முதலியவர்களுக்கும் ஹோமஞ் செய்யவேண்டும். பிறகு, ஆகாசசஞ்சாரியான தேவதைகளையும் பூமியிலுள்ள சகலதேவதைகளையும் குறித்து ஹோமஞ்செய்யவேண்டும்.

25. சுபநக்ஷத்திரம் சுபதினத்தில் சுபலெக்கினத்தில் சிலையை அந்த இடத்தில் ஸ்தாபனம் செய்யவேண்டும். அதன் மேற்கில் பெரிய தீபத்தையும் கிழக்கில் பூர்ணகும்பத்தையும் ஸ்தாபிக்கவேண்டும் பிறகு சல்லியமந்திரத்தை சொல்லவேண்டும்.

1. ஹே நந்தை வஸிஷ்டரின் புத்திரியே, என்குடும்பத்தை சகல சம்பத்துக்களாலும் நிரப்பி வைக்கவேண்டும் என்று பிரார்த்திக்கவேண்டும்.

2. ஹே பத்திரை காசிபருடைய பெண்ணே, க்ஷேமத்தை உண்டுபண்ணுகிற பத்திரையே, ஆயிசு ஆரோக்கியம் முதலிய சகல சம்பத்தையும் கொடுத்து சகல சல்லியங்களையும் நிவர்த்திசெய்.

3 ஹே ஜெயை பார்க்கவரிஷியினுடைய பெண்ணே, பிரஜைகளுக்கு சகல வித்தைகளையும் உண்டுபண்ணுகிறவளே இந்த இடத்தில் உன்னை பிரார்த்திக்கிறேன் சகல சல்லியங்களையும் நிவர்த்திசெய்.

4. ஹே, ரிக்தை அத்திரியின் பெண்ணே, த்ரித்திரத்தைபோக்கக்கூடியவளே, இந்த இடத்தில் இருந்துகொண்டு சகலசயபத்தையும்குடுத்து க்ஷேமத்தை உண்டாக்கவேணும்.

5. ஹே, பூரணையே ஆங்கிரஸவின் பெண்ணே, யாதொருகுறையில்லாமல், பூரணையாக இருக்கிற நீ இந்த கிரகத்தில் உள்ளவர்களுக்கு சர்வாபீஷ்டத்தையும் சுகத்தையும். கொடு என்று பிரார்த்திக்கவேண்டும்.

26. பிறகு பிரதான கும்பத்தையும், தீபத்தையும் அந்தஇடத்தில் வாத்திய கோஷங்களுடன் மண்ணால் மூடிவிடவேண்டும் சிலையின் ஹிருதயத்தில் கையை வைத்து வாஸ்து புருஷ நமஸ்தேஸ்து பூமிசைய்ய ரதப்பிரபோ என்கிற வேதமந்திரத்தினால் பிரார்த்து என்னுடைய கிரகத்தை காப்பாற்ற வேண்டும், சகலதானியாதிகளாலும், நிரப்பி வைக்கவேண்டும் சகலசம்பத்தையும் குடுக்கவேண்டும் சகல சல்லியங்களையும் போக்கடிக்கவேண்டும். உமக்கு நமஸ்காரஞ்செய்கிறேன் நீ தான் வாஸ்து ரூபி நீ ஜனங்களுக்கு ஹிதத்தைச்செய்யவேணுமென்று பிரார்த்திக்க வேணும்.

27. கணபதி பிரார்த்தனை பூமிதேவி பிரார்த்தனை செய்து வெளியில் பலி கொடுக்கவேண்டும். பிறகு எக்ஷாள், ராக்ஷஸாள், நாகர், பிசாசர், கிராமதேவதை, முதலிபவர்களுக்கு ஆகம மந்திரங்களினால் முன்சொல்லப்பட்ட பிரகாரம் செய்யவேண்டும்.

28. 8 கும்பங்களிலுமுள்ள ஜலங்களாலும் கிரகத்தை அபிஷேகம் செய்யவேண்டும் கிரகத்திலுள்ள சகலசல்லியங்களும் எடுக்கப்பட்ட படியால் மூன்றுவிதமான பேதங்களும் கடுமையான கிரகபீடைகளும் நசித்துப்போகட்டும் என்றுமந்திரத்தினால் சொல்லி புரோக்ஷிக்கவேண்டும்.

29. இந்தவிதமாக செய்துவைத்த ஆசாரியருக்கு பசுவை தானங்குடுக்க வேண்டும். இதரர்களுக்கு தக்ஷிணை தாம்பூலம்கொடுக்கவேண்டும் பிராமணர்களுக்குபோஜனம் செய்விக்கவேண்டும் இந்தபிரகாரம் செய்வானேயானால் சகலவிதமான கஷ்டங்களினின்று விடுவிக்கப்பட்டு தீர்க்காயுசு உடையவனாகியும் புத்திர பௌத்திர சகல சம்பத்தையும் அடைவார்கள்.

# 9-ம் அத்தியாயம்.

## கிரகவேதை.

| 1. பெயர். | விபரம். | உண்டாகும் தோஷம். |
|---|---|---|
| 1. அந்தகம் | இடைவெளி இல்லாமலிருப்பது | அதிக ரோகம் உண்டாம். |
| 2. ருதிரம் | ஆபத்தை அடையக் கூடியநிலைமையிலிருப்பது | அதிசாரபயம் உண்டாம். |
| 3. குப்ஜம் | பூர்த்தியாகாது | குஷ்டரோகம் உண்டாம். |
| 4. காணம் | கதவுகள் இல்லாமலிருப்பது | கண்போம். |
| 5. வதிகரம் | பூமிக்குள் பாதை இருப்பது | சகல துக்கமும் உண்டாம். |
| 6. திக்வக்கரம் | ஆபத்தான நிலைமையிலிருப்பது | கற்ப நாசம் உண்டாம். |
| 7. சிபிடம் | உச்சி மேடில்லாமலிருப்பது | நீசர்சேர்கை உண்டாம். |
| 8 வியங்கம் | பயங்கரமாயிருப்பது | அங்க ஹீனம் உண்டாம். |
| 9. சுரஜம் | பக்கம் உயர்ந்திருப்பது | தரித்திரம். |
| 10. குடிலம் | தாழ்ப்பாள் இல்லாமலிருப்பது | க்ஷயரோகம் உண்டாம். |
| 11. குட்டகம் | வாசலுக்கு எதிரில் சுவர்க்கட்டை இருத்தல் | சங்காதோஷம் உண்டாம். |
| 12. ஸ்ூப்தஜம் | அளர்த்தாக்கியது | வீட்டு எஜமானனுக் குகெடுதல்உண்டாம். |
| 13. சங்கபாலம் | பயத்தை உண்டாக்கக் கூடியது | குரூபமுண்டாம். |
| 14. விகடம் | ஒரு பக்கமில்லாமலிருப்பது | புத்திர நாசம். |
| 15. கங்கம் | அவலெக்ஷணமாயிருப்பது | சூன்னியம். |
| 16. கைங்கரம் | அவலக்ஷணமாயும் உயரமாயுமிருப்பது | ஸ்திரீ நாசமுண்டாம். |

இந்த விதமாக 16 வித வேதைகள். இப்படிப்பட்ட அவ லெக்ஷணமுள்ள வீடுகள் கூடாது. பின்னும் மற்ற வேதைகளையும் சொல்லுகிறேன்.

2. வீட்டுக்குச் சமீபத்தில் இடிபாதையுண்டானால் மரண பயத்தைக்கொடுக்கும். அக்கினி பாதை உண்டானால் தரித்திரத் தையும் புத்திரநாசத்தையும் குடுக்கும்.

3. விகாரமானதாயும் ஜீரணமானதாயும் முகப்பு விழுந்ததா யும், பாதி அக்கினி பாதைக்குள்ளானதாயும், அங்கஹீனமுள்ளதா யும், அதிக துவாரமுள்ளதாயும் இருக்கிற வீட்டை நீக்கிவிடவேண் டியது.

4. முன் பக்கத்தில் குற்றமிருந்தால் பரதேச யாத்திரை கி டைக்கும்.

5. மேல் பக்கம் குறைவாயிருந்தால் எஜமானனுக்கு பயம் உண்டாம்.

6. உருவழிந்து இருந்தால் சோகபயம்.

7. அநேக இடைவெளி இருந்தால் மரணபயம்.

8. கருங்கல் பின்பககப் கோடிகளில் உபயோகித்திருந்தால் சௌக்கியத்தை உண்டுபண்ணும்.

9. அதிக விஸ்தாரமான வீட்டுக்கு உளர்த்துவபதமென்று பெயர்.

10. அதிக நீளமான வீடு தரித்திரத்தைக் கொடுக்கும்.

11. முக்கோணவடிவமான வீடு சீக்கிரம் நாசமடையும். வெ ளியில் இருக்கப்பட்ட லெக்ஷணததைச் சொல்லுகிறேன்.

12. ஒரு வீட்டுக்குக்கொரு வீடு முன்பின்னாக இருந்தால் அதிக தோஷத்தையும் வியாதி; சத்துருவிர்த்தி தனவிரயம் இவைக ளைக்கொடுக்கும்.

13. **திருக்குவேதை**:—முன் வாசல்படிக்கு அடுத்த வாசல்படி பெரியதாயிருந்தால், திருக்வேதையாம். இதனால் தனநாசம் மரண பயம் உண்டாம்.

14. க்ஷாத்திரவேதை:—பசு ஹானியாம்.

15. சாயாவேதை;—2-வது 3-வது ஜாமங்களில் எந்தவீட்டின் நிழல் பூமியில் விழுகிறதோ அது சாயாவேதையாம். அதனால் வியாதி, பசு நாசம் இவைகள் உண்டாம்.

16. ருஜஜுவேதை:—நான்கு சுவர்களும் சரியாயிராவிட்டால் ருஜ்ஜு வேதையாம். அதனால் மிருக பயம் உண்டாம்.

17. வம்சவேதை:—ஒரு மூங்கிலின் நுனி வேறு மூங்கிலின் நுனியைப் பொருந்தவாவது மேல் தைத்த மூங்கிலின் நுனி சுவருக்கு வெளியில் வருவதாவது வம்சவேதையாம். இதனால் வம்ச ஹானி உண்டாம்.

18. உக்ஷவேதை:—இரண்டு உத்திரம் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பதாம். இதனால் கலகம், நாசம் இவைகள் உண்டாம்.

19. உச்சவேதை:—கிழக்கு வடக்கு பள்ளமாயிருப்பது. இதனால் சுகத்தைக் கொடுக்காது.

20 தந்தவேதை:—ஒரு வீட்டுக்கு ஒரு வீடு பள்ளமாயிருந்தாலும், சுவர் கோணலாயிருந்தாலும் தந்தவேதையாம். இவற்றால் சோகம், ரோகம் இவைகள் உண்டாம்.

21. கருங்கல் வீட்டின் நடுமத்தியிலிருந்தாலும் வாசலுக்கு நேர் வாரி விழுந்தாலும் வியாதி, தனவிரயம் இவைகள் உண்டாம்.

22. ஆற்றுக்கு சமீபத்திலிருந்தாலும், பருவதத்துக்குச் சமீபத்திலிருந்தாலும், சுவர் இல்லாமலிருந்தாலும், சதுப்பு நிலமாயிருந்தாலும், கருங்கல்லால் கட்டப்பட்டாலும், ஒரு நாள் கோட்டான்கள் வஸித்தாலும், காக்கைகள் வஸித்தாலும், முயல், ஸர்ப்பம் இவைகள் வஸித்தாலும், இடியால் பாதிக்கப்பட்டாலும், அக்கினியால் பாதிக்கப்பட்டாலும், அடிக்கடி சண்டை யுண்டானாலும், ஜலம் விழுந்தாலும், ஆமை, உடும்பு, நாய் இவைகள் வஸித்தாலும் பயத்தை உண்டாக்கக்கூடியதாயிருந்தாலும், சாலகம் இல்லாமலிருந்தாலும், சிகை இல்லாமலிருந்தாலும், மரங்கள் ரக்தமாயிருந்தாலும் தாழ்ப்பாள் இல்லாவிட்டாலும், கதவுகள், சப்தித்தாலும், கதவுகள் இரட்டை படையான பலகைகளாக இருந்தாலும், முச்சாரியாக இருந்தாலும், அதிக பெரியதாயிருந்தாலும், பயங்கரமாக இருந்தாலும், குப்ஜம், காணம், வதிகாம் இவற்றிற்குச் சொன்ன பலன்கள்.

22. கெடுதல் உண்டான வீடு, கொலை செய்யப்பட்ட வீடு, தற்கொலை செய்துகொண்டவீடு, சாலகம்இல்லாத வீடு, முன் பக்கம் கட்டப்படாத வீடு, ரக்த சம்பந்தமான மரங்களாலும் கருவை முதலிய முள்ளு மரங்களாலும் கட்டப்பட வீடு சமசதுரமான வீடு சுடுகாட்டுக்குச் சமீபத்தில் உள்ளது சதுப்பு நிலம் மிலேச்சர்கள் சண்டாளர்கள் வசிக்கப்பட்ட இடங்களுக்குச் சமீபமும் கூடாது.

23. வைத்த வாசலை அடைத்து வேறு வாசல் வைக்கப்பட்டாலும், வாசல் நிலையில் சூரிய பலகை யில்லாவிட்டாலும் அதில் வசிப்பவர்களுக்கு சகல விதமான துன்பமும் உண்டாம். மரண பயத்தையும் குடுக்கும்.

24. ஒரு வீட்டைப்பிரித்து அந்த சமான்களை கொண்டு வேறு வீடு கட்டக்கூடாது. அப்படிக் கட்டினால் சீக்கிரத்தில் கெடுதல் அடையும். எஜமானனுக்கு பலவித துன்பங்கள் உண்டாம்

25. ஒரு வீடு ஜீரணமானால் அதைப் புதுப்பிக்கலாம். இது வரையில் சொன்னது பொதுவாய் எல்லா ஜாதிக்கும் பொருந்தும்.

26. கிழக்கு வடக்கு தணிந்து மேற்கு தெற்கு உயர்ந்திருப்பது கூடாது.

27 ஒரு வீட்டுக்கு தென்பக்க மட்டிலும் உயர்ந்து மற்ற பக்கம் தணிந்திருப்பது கூடாது.

28. ஒருவன் தெற்கு வடக்காக இரண்டு வீடு கட்டி யிருப்பானாகில் வீட்டுக்குடையவன் வடக்கம் வீட்டில் இருக்கவேண்டியது. தென்பக்கம் வீட்டிலிருப்பானாகில் தனம் புத்திரர் இவைகளுக்கு குறைவுண்டாம்.

29. ஒரு வீட்டுக்கு முன் பக்கம் தணிந்து பின்பக்கம் உயர்ந்திருப்பது கூடாது.

30. இரண்டுபக்கம் உயர்ந்து மத்தியில்தணிந்து இருக்கலாம்.

31. விகோணவேதை:—ஆக்கினேயத்தையாவது, வாயுவையாவது பார்த்துக்கட்டப்பட்டிருந்தால் தாரம் புத்திரநாசம் இவைகளைக் கொடுக்கும். தென்பக்கம் உயர்ந்திருந்தால் சகல பாக்கியமும போய்விடும். ஸ்திரீ நாசம் தனம் புத்திர நாசம் இவைகளுண்டாம். அந்த வீட்டில் வசிக்கக்கூடாது.

32. (1) அமாவாஸியையில் பிறந்த பிள்ளைகள் குலத்தைக் கெடுக்கும் அதைப்போல் சம்பந்தை உத்தேசிக்கிறவன் இப்படிப் பட்ட வீடுகளை நீக்கி விடவேண்டும். (2) உதடு பெருத்தவளாயும் கன்னத்தில் கருப்பு வரி விழுந்தவளாயும் இருக்கிற பெண் புருஷனை கொல்வள். அதைப்போலத்தான் இப்படிபட்ட வீடுகள். (3) சீக்குளளதும் சோம்பலுள்ளதுமான திரேகம், பிள்ளை இல்லாத குலம் ம் தரித்திர ஜன்மம் இந்த மூன்றுக்கும் சரி.

33. விஷமவேதை:—வீட்டுக்கு தெற்கு பக்கத்தில் குளமிருந்தால் அதனால் புத்திரன் உண்டாகாது அப்படி உண்டானாலும் அழியும் இல்லாவிடில் பூமி நாசம், சோகமுண்டாம்.

33. ஜலமானது நல்ல இடத்தில் இருந்தாலும் சம பூமியிலிருந்தாலும் அதற்கு வேதை யில்லை.

34. ஆல், அரசு, புளி, அத்தி இவைகள் வீட்டுக்குச்சமீபத்தில் இருப்பது வேதையாம். கொன்றை வேப்பு இவைகள் வீட்டுக்குச்சமீபத்தில் இருபபது நல்லது. ஆக்கினேயத்தில் பால் மரங்களும், தெற்கில் முள் மரங்களும் மேற்கில் வாழைமுதலிய ஜலசம்பந்தமான மரங்களும, வடக்கில் பழமரங்களும். இருப்பது உத்தமம்.

35. மனைக்கொல்லையில பருத்தி, அகத்தி, பனை, நாகல், நெல்லி, எட்டி, எருக்கு, முருக்கு, புளி, ஆமணக்கு, ஆல், அரசு, அத்தி இந்த மரங்கள் கூடாது. அப்படி இருந்தால் லெக்ஷுமி விலகிவிடுவாள்.

36 கிழக்கு திக்குமுதல் கெருடன், பூனை, சிங்கம், நாய், சர்ப்பம், எலி, யானை, முயல் என எட்டுவகையான யோனிகள் நிற்கும். இதில் ஒவ்வொன்றுக்கும் 5-வது யோனி பகையாம். அப்படிப்பட்ட யோனிகளில் கெருடன், சிங்கம், ரிஷபம், யானை இந்த நான்கும் உத்தமமானது மற்ற யோனி கூடாது. ஆகையால் கிழக்கு மேற்கு, தெற்கு, வடக்கு இந்த நான்கு திசைகளையும் நோக்கி வீடு கட்டவேண்டும். மற்ற திக்குகளை நோக்கிக கட்டக்கூடாது.

37. மற்ற நான்கு திக்குகளையும் பார்த்துக்கட்டுவது சண்டாளர், ஜாதிஈனர், திருடர், இவர்களுக்குப் பாதகமில்லை. மற்றவர்களுக்குக் கூடாது.

38. திசை யோனிக்கும் மனை யோனிக்கும் பகையாயிருக்கக் கூடாது.

39. பிணம் போகும் பாதை, சவங்கள் புதைக்கப்பட்ட இடங்கள் கூடாது,

40. ஆலயம், தோட்டம், ஆலாத்தி இவைகளின் நடப்புக்கும் முதலில் தெற்கு ஆரம்பம் பிறகு மேற்கு வடக்கு மத்தியம் மேற்கு கிழக்கு சேர்க்கப்பட்டால் அகத்தைக்கெடுக்கும்

41. எதிர் வீட்டின் வாசல்படி மூன்றாகக்கொண்டு [illegible] பிருக்கலாகாது.

